# சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

மதமாற்றம், சமூகத்தில் காணப்படும் தர்மானுஷ்டானக் குறைவு இவைகளுக்குப் பரிகாரமாக மக்கள் மனதில் நல்ல உணர்வுகளைத் தூண்டி பக்தி வழியில் வழி நடத்துவதற்கு ஒரு நல்ல உபாயமாக தர்ம சக்கரம் மக்களில் பலருக்குக் கிடைக்கவேண்டுமெனக் கருதுகிறோம். நம் அன்பர்களில் பலரும் இக்கருத்தைத் தெரிவிக்கிறார்கள். ஆகவே நம் சந்தாதாரர்கள் தாங்களே தர்ம சக்கரத்தைப் பயன்படுத்தவும் மற்றவர்களுக்குத் தந்து படிக்க உதவவும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தந்து உதவும்படியும் வேண்டுகிறோம்.

தர்ம சக்கரத்தில் வரும் விஷயங்கள் செய்தித்தாள்களில் உள்ளவை போன்று தாற்காலிகமானவைகளாக இல்லாமல் நிரந்தரமான தத்துவ ஆராய்ச்சிகளாக இருக்கின்றன. சந்தர்ப்பம் வாய்க்கும்பொழுதெல்லாம் திரும்பவும் வாசிக்கக் கூடிய ஒரு நூலாக இது அமைகிறது. ஆதலால் ஓராண்டுக்கான பன்னிரண்டு தர்ம சக்கர இதழ்களையும் பொருளடக்கத்துடன் பைண்டு செய்து வைத்துக்கொண்டால் அது ஒரு நல்ல புத்தகமாக அமையும். நாம் படிப்பதற்கும் மற்றவர்களுக்குப் படிக்கத் தருதற்கும் அது வசதியாக இருக்கும்.

ஆகவே அன்பர்கள் முயன்று புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்திப் பலரையும் ஆத்மீக வாழ்க்கையில் ஈடுபடச் செய்யக் கோருகிறோம். குறிப்பிட்ட அளவே பிரதிகள் அச்சாக்கப் படுவதால் புதுப்பித்துக்கொள்ள வேண்டிய பழைய சந்தாதாரர்கள் உடன் புதுப்பித்துக்கொண்டு மற்றும் பலரையும் புதிய சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தரும் அருட்பணியில் ஈடுபடும்படி கேட்டுக்கொள்கின்றோம்.

பொருளாதாரத்தில் எந்த நிலையில் உள்ளவர்களுக்கும் தர்ம சக்கரம் கிடைக்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் சகாய சந்தா, சாதாரண சந்தா, டிபாசிட் சந்தா, அரசினர் நூல் நிலையங்களுக்கு இலவசமாக அனுப்புதல் ஆகிய முறைகளை நடைமுறையில் வைத்துள்ளோம்.

சந்தா விவரம் பொருளடக்கத்தின்கீழ் தரப்பட்டுள்ளது.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**

திருப்பராய்த்துறை-639 115

திருச்சி ஜில்லா

// தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹு ஆவணி மீ | ஆரம் 8 |
|---|---|---|


## பொருளடக்கம்



உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா: ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா: ரூ. 35-00**

## அந்தர்யோக விவரங்கள்

**கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 4—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண—விவேகானந்த ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
உணவு வசதி: பகல் உணவு ரூ. 1-50; மாலை சிற்றுண்டி ரூ. 1-00 நேரில் செலுத்தவும்.

**சேலம் ஜில்லா—ஓமலூரில் 4—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: குப்புசாமி செட்டியார் ஆரம்பப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—பேரையூரில் 4—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: அருள்மிகு மேலப்பரங்கிரி சுப்பிரமணிய சுவாமி ஆலயம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சங்கரானந்தர்
உணவு வசதி: மதிய உணவிற்கு ரூ. 1-50 செலுத்திச் சீட்டுப்பெற்றுக்கொள்ளலாம்.

[தொடர்ச்சி பின்பக்கம் பார்க்க]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**திருநெல்வேலி ஜில்லா—ஆத்தூரில் 4—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: *அருள்மிகு சோமசுந்தரி அம்மன் திருக்கோவில்*

நேரம்: *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்

**மதுரை ஜில்லா—தோப்பூரில் 11—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: *சிவானந்த தபோவனம்*

நேரம்: *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஸதானந்தர்

**திருச்சி ஜில்லா—ஸ்ரீரங்கத்தில் 16—9—83 வெள்ளிக்கிழமை**

இடம்: *ஸ்ரீரங்கம் ரயில்வே ஸ்டேஷன் பஸ் ஸ்டாப் அருகில் உள்ள தோப்பில் இருக்கும் ஸ்ரீஅன்னகாமாக்ஷி அம்மன் கோவில்*

நேரம்: *மாலை 6-00 மணி முதல் இரவு 8-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கோவை ஜில்லா—பல்லடத்தில் 18—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: *காந்திரோடு, ஹைஸ்கூல் எதிரிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்*

நேரம்: *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கோவை ஜில்லா—கேத்தனூரில் 18—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: *ஸ்ரீ பெருமாள் கோவில்*

நேரம்: *இரவு 7-00 மணிமுதல் 9-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 18—9—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: *சி. ச. அண்ணாமலை நாடார் கல்யாண மண்டபம் (பெரிய காளியம்மன் கோவில்)*

நேரம்: *காலை 10 மணிமுதல் 12-00 மணிவரை; மாலை 5-00 மணிமுதல் 8 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஸதானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 18—9—83 ஞாயிறு**

இடம்: *அருள்மிகு அகஸ்தியர் திருக்கோவில்*

நேரம்: *காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்

---

*அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன்வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.*



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஆவணி மீ | ஆரம் 8 |
|---|---|---|

## பிரார்த்தனை

क्व भूतं क्व भविष्यद् वा वर्तमानमपि क्व वा ।
क्व देशः क्व च वा नित्यं स्वमहिम्नि स्थितस्य मे ॥

— अष्टावक्रसंहिता

க்வ பூதம் க்வ பவிஷ்யத் வா வர்தமானமபி க்வ வா ।
க்வ தேச: க்வ ச வா நித்யம் ஸ்வமஹிம்னி ஸ்திதஸ்ய மே ॥

— அஷ்டாவக்ர ஸம்ஹிதா

ஆத்ம சொருபத்தில் திளைத்திருக்கிற எனக்கு இறந்தகாலம் எங்கே? எதிர்காலம் எங்கே? நிகழ்காலம்தான் எங்கே? தேசம் எங்கே? நித்தியம்தான் எங்கே?

எனைநான்என்ப(து) அறியேன்பகல் இர(வு)ஆவதும் அறியேன்
மனவாசகங் கடந்தான்எனை மத்தோன்மத்த னாக்கிச்
சினமால்விடை உடையான்மன்னு திருப்பெருந்துறை உறையும்
பனவன்எனைச் செய்தபடி(று) அறியேன்பரஞ் சுடரே.

— திருவாசகம்

# அருள் விருந்து

நனவையும் கனவையும் நிகராகக் காண்பவன் ஞானி.

எல்லாச் சூழ்நிலைகளிலும் இன்புற்றிருப்பவன் அறிஞன்.

மனச்சாட்சிக்கு நிகரான ஆமோதிப்பு வேறு ஏதும் இல்லை.

அன்பும் அனுதாபமும் கூடிய மனநிலை மனிதனை மேலோனுக்குகிறது.

அதிகாலையில் எழுந்திருப்பவன் அதிவிரைவில் ஆத்ம பரிபாகம் அடைகிறுன்.

ஆத்ம பரிபாகத்துக்கு ஏற்பச் சாதகனுடைய அன்பும் நம்பிக்கையும் ஓங்குகின்றன.

பொருள்சேர்ந்த ஒரு சொல் பொருள்சேராத ஆயிரம் சொற்களினும் மிக்கதாம்.

பதைபதைப்புக்கு ஆளாகிறவன் அறிவுத்துறையில் முன்னேற்றம் அடையமாட்டான்.

உள்ளத்தினுள் அணையாவிளக்காக எரிந்துகொண்டிருக்கும் ஆத்மஜோதியைக் காண்.

தான் செய்த குற்றத்தை அறிந்துகொள்கிறவன் அதிவிரைவில் முன்னேற்றமடைகிறுன்.

காணப்படுபொருளாகிய பிரபஞ்சம் காண்பவனுகிய பரம்பொருளில் ஒடுங்குகிறது.

தர்மத்தை முறையாகக் கடைப்பிடிப்பவன் நலன், கேடு ஆகியவைகளால் பாதிக்கப்படமாட்டான்.

அறநெறியைப் பின்பற்றுவது மிகச் சுலபம். அதைப் பின்பற்றுபவன் பாபத்துக்கு ஆளாவதில்லை.

உள்ளத்தில் உதிக்கும் உணர்வே பிரார்த்தனையாகிறது. வெறும் வார்த்தை பிரார்த்தனை ஆகாது.

வாழ்க்கைப் பிரச்னை ஒன்றை அமைதியாகச் சமாளிப்பதற்கேற்ப மானுடன் ஒருவன் திண்ணியனுகிறுன்.

அரியபெரிய செயல்களுக்கேற்ற காலம் வருகிறபொழுது இறைவனருளால் அவை எளிதில் நிறைவேறுகின்றன.



பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சதேவர் பக்தி ததும்பும் பாடல்களை மேலும் பாடுவாராயினர். அவர் பாடிய கீர்த்தனங்களிலே அடங்கியிருந்த கருத்துக்களாவன: "கௌராங்கருடைய பக்தியின் அலை மோதுதலால் அவருடைய பிறப்பிடமாகிய நாதியாவே நடுங்குகிறது. ஹரியின் நாமத்தை உச்சரித்துக்கொண்டு நடந்து போகின்றவர்கள் யாவர்? மதாய், வெளியே சென்று பார். தங்களுடைய திருப்பாதங்களிலே பொன்னால் செய்யப்பட்ட சிலம்புகளை அணிந்திருக்கின்ற கௌராங்கரும் நித்தியானந்தருமாக அவர்கள் காட்சி கொடுக்கிறார்கள். முடி நீங்கப்பெற்ற மொட்டைத் தலையர்களாகவும், கந்தையை அணிந்தவர்களாகவும் அவர்கள் பக்திப் பரவசத்தால் தட்டுத் தடுமாறிக்கொண்டு நடந்துபோகின்றார்கள்."

இளைய நரேந்திரன் இப்பொழுது புறப்பட்டுப்போக ஆயத்தமாயினன். அத்தருணத்தில் பரமஹம்சதேவர் அவனுக்குப் புகட்டிய புத்திமதியாவது: "உன் பெற்றோருக்குப் பொருத்தமான பாங்கிலே நீ மரியாதை காட்டுவாயாக. ஆனால் நீ பரமனை நாடிச் செல்கிற பாதைக்கு இடையூறாக அவர்கள் இருப்பார்களாகில் அவர்களைப் பொருட்படுத்தாதே. நீ உன்னுடைய ஆடையை இறுக இடுப்பில் வரிந்து கட்டிக்கொண்டு தந்தையென்னும் பொல்லாத பெயர் வழியோடு போர்புரிய ஆயத்தமாயிருக்க வேண்டும்."

இளைய நரேந்திரன்: "ஐயனே, உண்மையில் என் பெற்றோருக்கு நான் அஞ்சுபவன் அல்லேன்."

கிரீஷ் சந்திரகோஷ் இப்போது அங்கு வந்து சேர்ந்தார். அங்ஙனம் வந்தவரைப் பரமஹம்சதேவர் திரைலோக்கியருக்கு அறிமுகப் படுத்தினர். அவர்கள் ஒருவருக்கொருவர் தங்களுடைய கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ள வேண்டுமென்று பரமஹம்சதேவர் பகர்ந்தார். "அன்று பாடிய அந்தப் பாடலை நீங்கள் மீண்டும் பாடுங்கள்" என்று பரமஹம்சதேவர் வேண்டினர்.

திரைலோக்கியர் பாடியதாவது: "சசிதேவியின் மைந்தராகிய கௌராங்கருக்கு வெற்றி உண்டாகுக! நல்லொழுக்கங்கள் அனைத்துக்கும் உறைவிடமாகிற அவரைப் போற்றுகிறேன். அன்பை வளர்க்கும் ஸ்பரிசவேதி யாவார் அவர். பேரானந்தக் கடலாக அவர் அமைந்துள்ளார். பக்தர்களுடைய உள்ளங்களைக் கொள்ளைகொண்டு போகிறவர் அவர்; கட்டழகே வடிவெடுத்தவர். கண்ணைக் கவர்கின்ற தங்கம் போன்று திகழ்கின்ற அவர் காட்சிக்கு இனியவராக இருக்கிறார்."

இப்பாடலுக்குச் செவி சாய்த்துக்கொண்டிருந்த பரமஹம்ச தேவருக்கு இப்பொழுது சமாதிநிலை கூடுவதாயிற்று. உலகத்தை அறவே மறந்தவராக அவர் எழுந்து நின்றார்.

அங்ஙனம் நின்றவருக்குச் சிறிது நேரத்திற்குப் பிறகு இவ்வையக உணர்வு சிறிது திரும்பி வருவதாயிற்று. அப்போது அவர், "நான் கண்ட காட்சிதான் என்னே! என்னும் பாடலைப் பாடுவீராக!" என்று இயம்பினர்.

திரைலோக்கியர் மீண்டும் பாடியதாவது: "கேசவ பாரதியின் குடிசையிலே நான் கண்ட காட்சிதான் என்னே! கௌராங்கர் ஆனந்தப் பரவசமடைந்தவராகவும் ஆனந்தக் கண்ணீர் ஆறாகப்பெருக்கெடுத்து வருபவராகவும் காட்சி கொடுக்கிறார். மதம்பிடித்த யானைபோன்று அவர் ஆனந்தத் தாண்டவம் ஆடுகிறார் பேரன்பில் மூழ்கியவராகத் தழுதழுத்த குரலில் அவர் பாடுகிறார்.

"அவர் தரையிலே நீண்டு படுத்துப் புரள்கின்றார். தாம் கொட்டிய ஆனந்தப் பாஷ்பத்திலே அவர் நீந்துகிறார். தாரை தாரையாகக் கண்ணீர் அவர் கண்களிலிருந்து பெருக்கெடுத்து வருகிறது. ஹரிபோலோ ஹரி என்று அவர் உரக்க ஓலமிடுகிறார். சிங்கம் கர்ஜிப்பது போன்று இறைவனுடைய நாமத்தை அவர் உரக்கக் கூவுகின்றார். அதன் எதிரொலி விண்ணுலகைச் சென்று மோதுகிறது. தம்மை ஒரு பக்தனாக அங்கீகரித்துக்கொள்ளும்படி ஆங்குக் குழுமியிருக்கும் மக்களிடம் அவர்

பரிந்து விண்ணப்பிக்கின்ருர்.

"முடியை அகற்றி மொட்டைத்தலையோடு அவர் இலங்குகின்ருர். காவியுடை அவருடைய பொன்னுர் மேனிக்குப் புதிய சோபையைத் தருகிறது. பாரமார்த்திகப் பேரன்பே வடிவெடுத்தவர் அவர். ஆதலால் அவருடைய அன்பு கல்நெஞ்சையும் கரைக்க வல்லதாகிறது. மனிதனுடைய துயரத்தால் தாக்கப் பெற்றவராக அனுதாபமே வடிவெடுத்தவராக அவர் இலங்குகின்ருர். பிரேம்தாஸர் அன்னவர்க்கு அடிமையாவதைப் பாக்கியம் எனக் கருதுகிருர். வீடுவீடாகச் சென்று கௌராங்கருடைய மகிமைகளைக் குறித்துப் பாடுவதும் தமக்கு வாய்த்துள்ள பெரிய பேருக அவர் கருதுகிருர்."

இங்ஙனம் மக்கள் எல்லாரையும் ஆனந்தப் பரவசத்தில் ஆழ்த்தியிருந்த சங்கீர்த்தனம் முடிவுற்றது. மாலை நேரம் அணுகி வந்து கொண்டிருந்தது. பக்தர்கள் எல்லாரும் பரமஹம்சதேவரைப் புடைசூழ்ந்து நின்றுகொண்டிருந்தனர்.

இப்பொழுது நிகழ்ந்த சங்கீர்த்தனத்தில் பக்கவாத்தியம் ஏதும்இல்லை என்று பரமஹம்சதேவர் ராம் என்னும் பக்தரிடம் தெரிவித்தார். "பக்கவாத்தியம் இருக்கின்றபொழுது இன்னிசையானது ஒரு தனி சோபையுடன் திகழ்கிறது. இதுபோன்ற நிகழ்ச்சி ஒன்றைப் பலராம் எப்படிச் சமாளிக்கிருர் என்பது உமக்குத் தெரியுமா? காரியங்களைச் சிக்கனமாகச் சமாளிப்பதில் அவர் ஓர் ஒப்பற்ற நிபுணர். உலோபித்தனம் நிறைந்த பிராம்மணன் ஒருவன் பசு ஒன்றை வளர்த்து வந்தான். அப்பசுவானது தீனி தின்பது மிகக் குறைவாக இருக்க வேண்டும் என்பது அவனுடைய நோக்கம். மற்று அது குடம் குடமாகப் பால் தரவேண்டுமாம். (அதைக்கேட்டு எல்லாரும் நகைக்கின்ருர்கள்.) பலராம் போசுவினுடைய திட்டப்படி பாடுகின்றவன் தானே மிருதங்கம் அடிப்பதையும் சமாளித்துக் கொள்ளவேண்டும்." இதைக் கேட்டு மறுபடியும் எல்லாரும் நகைக்கின்ருர்கள்.

அஸ்தமனம் வந்து இருள் சூழ்ந்தது. முன் மண்டபத்திலும் திண்ணையிலும் தீபங்கள் ஏற்றி வைக்கப்பட்டன. பரமஹம்சதேவர் அன்னை பராசக்திக்குத் தலைவணங்கினுர். அதன் பிறகு இறைவனுடைய திருநாமத்தைத் தம் அடங்கிய இனிய குரலிலே ஓதுவாராயினர். பக்தர்கள் எல்லாரும் அவரைச் சுற்றிலும் அமர்ந்து கொண்டனர். அவர் நிகழ்த்திய நாம உச்சாரணைக்கு அவர்கள் எல்லாரும் ஆழ்ந்து செவிசாய்த்துக் கொண்டிருந்தனர். பரமஹம்ச தேவர் இவ்வுலக வாழ்வுக்கு ஆரம்பத்தில் உதாசீனராக இருந்தார் என்பதும் கேசவ சந்திரசேனரைச் சந்தித்த பிறகு தாம் கொண்டிருந்த அந்த எண்ணத்தைத் திருத்தி அமைத்துக்கொண்டார் என்பதும் பிரம்ம சமாஜத்தவர்கள் கொண்டிருந்த அபிப்பிராயமாகும். அதைப்பற்றித் திரைலோக்கியரோடு விவாதிக்கவேண்டுமென்றும் அங்குக் குழுமியிருந்த அன்பர்கள் எண்ணினுர்கள். கிரீஷ் சந்திரகோஷர் அப்பேச்சைத் துவக்கி வைத்தார்.

கிரீஷர் திரைலோக்கியரிடம் சொன்னதாவது: "கேசவ சந்திரசேனரோடு இணக்கம் கொண்டதன் விளைவாகப் பரமஹம்சதேவர் இவ்வுலகைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தைத் திருத்தியமைத்துக் கொண்டார் என்று தாம் எழுதியுள்ளீர். ஆனல் நீங்கள் அப்படி எழுதியது சரியன்று."

பரமஹம்சதேவர் திரைலோக்கியரையும் ஏனைய பக்தர்களையும் பார்த்து இங்ஙனம் இயம்பினுர்: "ஆத்ம சாதகன் ஒருவன் இறைவனிடமிருந்து ஊற்றெடுத்து வரும் பேரானந்தத்தை அனுபவிப்பானுகில் இவ்வுலகம் தருகிற இன்பத்தில் அவன் கொண்டுள்ள நாட்டம் குறைந்துபட்டுப் போகிறது. இறைவனுடைய பேரானந்தத்தை அனுபவித்தான பிறகு உலகில் உள்ள அனைத்தும் சுவையற்றவை என அவனுக்குத் தென்படுகின்றன. நல்ல சால்வை ஒன்று ஒரு மனிதனுக்கு அகப்படுகிறபொழுது சாதாரணப் போர்வையில் அவன் விருப்பம் வைக்கமாட்டான். கற்கண்டைச் சுவைத்தவன் கருப்பட்டியைச் சுவைக்க விரும்பமாட்டான்."

தாம் எழுதியது உலகப்பற்றுடையவர்களைப் பற்றியது என்றும் பரநாட்டம் பூண்டிருக்கின்ற பெருமக்களைப் பற்றியதன்று என்றும் திரைலோக்கியர் தாம் எழுதியதற்கு வியாக்கியானம் தெரிவித்தார்.

பரமஹம்சதேவர்: "தாம் இயம்புவதில் பொருள் ஏதும் இருப்பதாக எனக்குத் தென்படவில்லை. உலக வாழ்வில் ஈடுபட்டுக் கொண்டே பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்வதைப் பற்றித் தாராளமாக மக்கள் பேசுகிறார்கள். மற்று யோகமும் போகமும் ஒன்றுபட மாட்டா. பாரமார்த்திகப் பெருவாழ்வில் சிறிதளவாவது சாதகன் ஒருவன் சுவை காண்பானாகில் பின்பு அவன் உலகம் தருகிற சிற்றின்பத்தைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டான். உலகக் கடமைகளில் அன்னவர்கள் வைத்திருந்த பற்றுதலும் படிப்படியாகக் குறைந்து பட்டுப் போகிறது பேரானந்தம் அவர்கள் உள்ளத்தில் ஊற்றெடுத்து வருகின்றபொழுது உலகக் கடமைகளெல்லாம் தாமாகவே கைநழுவிப் போய்விடுகின்றன. பேரானந்தத்தையே மேலும் மேலும் அவர்கள் நாடுகின்றனர். இறைவனிடமிருந்து வருகின்ற பேரானந்தத்தோடு இவ்வுலகினின்று வருகின்ற சிற்றின்பத்தைச் சீர்தூக்குவது சாத்தியப்படுமா? பரமானந்தத்தை ஒரு தடவை அனுபவிக்கின்றவன் மீண்டும் மீண்டும் அதே பரமானந்தத்தையே நாடிச் செல்வான். அத்தகைய பாரமார்த்திகப் பெருநிலையை அடையப்பெற்றான் பிறகு இவ்வுலக வாழ்வு இருப்பதைப் பற்றியோ கைநழுவிப் போவதைப் பற்றியோ அவனுக்குக் கவலையேதும் இல்லை.

"சாதகப் பறவையின் பாங்கோடு பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்பவனின் பாங்கை ஒப்பிடலாம். பூமியில் கடல்களும் நதிகளும் தடாகங்களும் ஏராளமாக இருக்கின்றன. அப்படி இருந்தும் தாகத்தால் தவித்துக் கொண்டிருக்கின்ற சாதகப்பறவை ஒன்று பூமியில் படிந்த நீரை ஒரு பொழுதும் நாடாது. தாகத்தினால் அதன் தொண்டை வறண்டு போயிருக்கலாம். சாகின்ற நிலையையும் அது எட்டியிருக்கலாம். எந்த நெருக்கடியிலும் அப்பறவையானது பூமியில் படிந்த நீரைத் தொடாது. சுவாதி நட்சத்திரம் உச்சத்திலிருக்கின்றபொழுது பெய்கின்ற மழைநீர் ஒன்றையே அது பருகும். அதன் தொண்டை உலர்ந்து போவதாயிருந்தாலும் வேறு எந்த நீரையும் அது நாடாது. அதே விதத்தில் தீவிரமான ஆத்ம சாதகன் ஒருவன் பரம்பொருளிடமிருந்து வருகின்ற பேரானந்தத்தையே நாடுவான். பிரபஞ்சம் தருகின்ற இந்திரிய சுகம் மற்றவர்களுக்கு எவ்வளவு கவர்ச்சிகரமாகத் தென்பட்டாலும் அத்தகைய அற்ப சுகத்தை அவன் ஒருபொழுதும் நாடான்.

"உலகப் பற்றையும் தெய்வப்பற்றையும் ஒன்றோடொன்று இணைத்துத் தாங்கள் பற்றிப் பிடித்து வருவதாக உலகமக்களில் பலர் பகர்கின்றனர். மதுபானத்தை ஒரு சிறிதளவு அருந்தியவனுக்குப் போதையும் இருக்கும்; உலக ஞாபகமும் இருக்கும். மற்று, மதுபானத்தை மிகைபட அருந்தியவனுக்கு உலகின் தோற்றம் சிறிதளவும் இருக்கமாட்டாது.

"இறைவனுடைய பேரானந்தத்தைச் சுவைக்கின்றவன் வேறு எப்பொருளிடமிருந்தும் எவ்விதமான ஆனந்தத்தையும் காணமாட்டான். அத்தகையவனிடம் பொருளைப் பற்றியும் போகத்தைப்பற்றியும் கிளப்புகின்ற பேச்சு அவனுடைய இருதயத்தைக் கத்தியால் குத்துவதற்கு நிகராகத் துன்பத்தை விளைவிக்கிறது."

ஒருவாறு தமக்குத்தாமே பரமஹம்சதேவர் பகர்ந்துகொண்டதாவது: "உலகத்தவர்களுடைய பேச்சை ரசிக்க எனக்கு இயலாது"

மீண்டும் ஆங்குக் குழுமியிருந்த பக்தர்களிடம் பரமஹம்சர் பகர்ந்ததாவது: "கடவுள் நாட்டம் அதிகரித்து வருகின்றபொழுது பணத்தைப் பற்றிய பேச்சும் ஏனைய லௌகீகப் பேச்சும் சாதகனுக்கு மையல் ஊட்ட மாட்டா."

திரைலோக்கியர் கொடுத்த மறுமொழியாவது: "ஐயனே, உலகில் வாழ்ந்திருக்கின்ற ஒருவனுக்குப் பணம் முற்றிலும் அவசியமானது. எதிர்காலத்துக்காகவென்று சிறிது சேமித்து வைப்பதும் அவனுடைய கடமையாகும். யாசகர்களுக்கு ஏதாவது தானம் பண்ணவும் அவன் கடமைப்பட்டிருக்கின்றான்."

பரமஹம்சதேவர்: "என்ன சொல்கின்றீர்! மனிதன் முதலில் பணத்தைச் சம்பாதிக்க வேண்டும். பிறகுதான் அவன் பரநாட்டம் பூணவேண்டும் என்பதுதானே உம் கருத்து? தானம் செய்பவரைப்பற்றியும் மற்றவர்களுக்கு இரக்கம் காட்டுபவரைப்பற்றியும் நீர் தாராளமாகப் பேசுகின்றீர் ஆயினும் உலகத்தவர்களுடைய போக்குத்தான் என்னே!"

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

**9-14. அடிமுடிகாட் டாதசுத்த அப்பரம்ஆம் ஜோதிக்**
**கடுவெளிவந்து என்னைக் கலக்குநாள்**
**[எந்நாளோ.**

மெய்ப்பொருளுக்குத் துவக்கமும் இல்லை; முடிவும் இல்லை. ஏனென்றால் எது தோன்றி மறைகிறதோ அது மெய்ப்பொருளாக மாட்டாது. அதற்கு வடிவம் இல்லை. எது வடிவம் எடுக்கிறதோ அதற்கு எல்லை உண்டு. எதற்கு எல்லை இருக்கிறதோ அது எல்லா இடத்திலும் இருக்கமாட்டாது. எது ஓரிடத்தில் இருந்து மற்றோரிடத்தில் இல்லாது போகிறதோ அது மெய்ப்பொருளாகமாட்டாது. 'பிரக்ஞானம் பிரம்மம்' என்பது மஹாவாக்கியங்களில் ஒன்று. 'பேரறிவே பரவஸ்து' என்பது இதன் பொருள். சிதாகாசம் எனவும் சிதம்பரம் எனவும் இம்மெய்ப்பொருள் இயம்பப் பெறுகிறது.

எங்கேயோ மலையில் உற்பத்தியாகி ஓடி வருகிற நதியானது படிப்படியாக வடிவத்தில் பெரியதாகிறது. கடலை அணுகும்பொழுது கடலின் பாங்குகள் பல அந்த நதிக்கும் சொந்தமாகின்றன. அதேவிதத்தில் ஜீவாத்மாவானது சிற்றுயிராகத் தன் வாழ்வைத் துவக்கிப் பேருயிராகப் பரிணமிக்கிறது. பரிணமத்தில் உச்ச நிலையை எட்டியிருப்பவன் மனிதன் என்னும் ஜீவாத்மன். இந்த மனிதனுக்கே ஆத்ம பரிபாகம் அடைந்து வரவரப் பரம்பொருளின் பாங்குகள் பல அவனுக்குச் சொந்தமாகின்றன. சரீரத்தில் வாழ்ந்திருந்தும் அதில் அவன் கட்டுப்பட்டவனல்லன். சரீரத்தைத் தான் என்று உணர்கின்ற தேகாத்ம புத்தி அவனுக்கில்லை. ஆதலால் தேகத்தில் வாழ்ந்திருப்பதற்கிடையில் அதில் அவன் கட்டுண்டவனல்லன். கடைசியாகத் தேகத்திற்கு மரணம் என்னும் முடிவு வருகிறது. சரீரத்தில் தோன்றி அதில் வளர்ந்து வருவது உரோமம். அந்த உரோமத்தில் ஒன்று விழ்ந்துவிட்டால் அதை முன்னிட்டுச் சரீரத்துக்குக் கேடு ஏதும் இல்லை. அதே விதத்தில் ஆத்ம சொரூபத்தைச் சார்ந்திருக்கும் சரீரம் அழிந்துபட்டுப் போகுங்கால் அதை முன்னிட்டு ஆத்ம சொரூபத்துக்குக் கேடு ஏதும் இல்லை. அத்தகைய நிலையை எட்டுகின்ற ஜீவாத்மன் பரம்பொருளில் ஒன்றுபடுகிறான். கடலுக்குள்ளே விழும் மழைத்துளி நாமரூபத்தைப் புறக்கணித்துவிட்டுக் கடலில் ஒன்றுபடுகிறது. அங்ஙனம் பேரறிவுப் பேரானந்தத்தைப் பரிணமித்து வருகிற ஜீவாத்மன் அகண்டமாக இருக்கும் பேரறிவுப் பேரானந்தமாகிய பரத்தில் ஒன்றுபடுகிறான். அத்தகைய நிலையை ஜீவாத்மன் அதிவிரைவில் அடைய வேண்டும் என்பதே இக்கண்ணியின் உட்பொருளாம்.

**9-15. ஒன்றனையும் காட்டா உளத்துஇருளைச்**
**[துறைஇட்டு**
**நின்றபரஞ் ஜோதியுடன் நிற்குநாள் எந்நாளோ.**

ஜீவாத்மன் நாள்தோறும் அனுபவித்து வருவது அவஸ்தாத்திரயம் அல்லது மூன்றுவித மனநிலைகளாம். அம்மூன்றனுள் சுஷுப்தி அவஸ்தையில் தனிச் சிறப்பொன்று உண்டு. அந்நிலையில் மனது ஒடுங்கியிருக்கிறது; ஆனால் அது அழிந்துபட்டுப் போவதில்லை. அயர்ந்த உறக்கத்தில் ஜீவாத்மன் தன்னைத் தவிர வேறொன்றும் காண்கிறதில்லை. ஆதலால் சுஷுப்தி அவஸ்தை ஒருவிதத்தில் சமாதி நிலைக்கு ஒப்பானது. பிரபஞ்சப்பொருள் ஏதும் காண்போனாகிய ஆத்மனுக்குச் சுஷுப்தியிலும் இல்லை; சமாதியிலும் இல்லை. பின்பு சுஷுப்தியில் ஜீவாத்மன் அக்ஞானக் காரிருளில் மறைந்திருக்கிறான். சமாதியிலோ அக்ஞான இருளுக்கு இடமில்லை; ஞானசொரூபியாக ஆத்மன் அங்கு இலங்குகின்றான். சுஷுப்தி அவஸ்தைக்குப் போக்கும் வரவும் உண்டு. நாள்தோறும் அது திரும்பத் திரும்ப அயர்ந்த உறக்கத்தின் வாயிலாக ஜீவாத்மனுக்கு வந்து கொண்டேயிருக்கிறது. அப்படித் திரும்பத் திரும்ப வந்துகொண்டிருக்கின்ற காரிருளோடு கூடிய சுஷுப்தியானது சமாதி நிலை அடைந்தவனைப் பிறகு வந்து எட்டுவதில்லை. சமாதிநிலை அடைந்தவனுடைய உறக்கம் அறிதுயில் எனவும் யோக நித்திரை எனவும் இயம்பப்பெறுகிறது. ஆத்ம ஜோதி ஒன்றே யாண்டும் அணையா விளக்காகப் பிரகாசித்துக்கொண்

டிருக்கிறது. அப்பிரகாசத்தில் சமாதி நிலையை அடைந்திருக்கிறவன் யாண்டும் திளைத்திருக்கிறன். அது இரவு பகலற்ற இடம். அணையா விளக்காதலால் பரஞ்ஜோதி எனவும் அந்நிலை பகரப்பெறுகிறது. அத்தகைய நிர்விகல்ப சமாதியை அடையப்பெறுவது ஜீவாத்மனின் குறிக்கோள் என்பது இக்கண்ணியின் உட்பொருளாம்.

**9-16. எந்தச் சமயம் இசைந்தும்அறி வூடுஅறிவாய்**
**வந்தபெரு ளேபொருளா வாஞ்சிப்பது**
**எந்நாளோ.**

சமுதாயத்தில் சமயங்கள் பல அமைவது அவசியம். ஏனென்றல் மக்களுக்கிடையில் மனப்பான்மைகள் பல உள. அவரவர் அளவைக்கேற்ற பிரகாரம் உணவைச் சமைப்பதற்கு நிகராகக் கருத்து வேறுபாடுகளை அனுசரித்துச் சமயங்கள் பல அமைந்துள்ளன. ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்குமிடத்து மனப்பான்மையில் இரண்டுபேர் ஒரே அச்சில் அமைந்தவர்களல்லர். ஆயினும் சமயங்கள் அனைத்தின் குறிக்கோள் ஒன்றேயாம். விதவிதமான உணவை உண்டு உடலின் உறுதியையும் நலனையும் அடைவதற்கு நிகராக விதவிதமான சமயங்களை அனுஷ்டித்து மக்கள் தெய்விகத்தில் ஓங்கிவருவது அவசியம். அதற்கெல்லாம் மேலாகப் பரம்பொருளை அடைவது ஒன்றே இத்தனைகோடி உயிர்களின் இலக்காக இருந்து வருகிறது.

அனுஷ்டிக்கின்ற சமயங்களில் வேறுபாடு இருக்கலாம். ஆனல் அடையப்பெறும் இலக்காகிய பரம்பொருள் அனைவருக்கும் ஒன்றேயாம். மக்களுடைய உடலமைப்பில் வேறுபாடிருக்கிறது. ஆனல் நல்லறிவில் ஒற்றுமையே காணப்படுகிறது. அறிவைப் பாராட்டுகிறவர்கள் சரீரத்தில் அமைந்துள்ள வேற்றுமையைக் கருத்தில் வாங்கிக்கொள்வதில்லை. மக்கள் படைத்துள்ள நல்லறிவுக்கும் மூலப்பொருளாக இருப்பது பரமன் என்னும் வாலறிவனும். மனிதனுக்கு அறிவு ஓங்க ஓங்க மன அமைதி, மனத் தெளிவு உண்டாவது வெளிப்படை. தெளிந்த அறிவு, மூல அறிவாக இருக்கின்ற பரமன் மயமானதாம். அத்தகைய பரமனைக் கிரகித்துக்கொள்ளுதலும் தெளிந்த அறிவிற்கே சாத்தியமாகிறது. பரமன் என்னும் பேரறிவிற்குச் சமயங்கள் பெயர்கள் பல வழங்கியுள்ளன. பெயர்கள் பல எனினும் பொருள் ஒன்றேயாம். மெய்ப்பொருளை வேதாந்தம் பரப்பிரம்மம் என்றும் சைவம் சிவம் என்றும் வைஷ்ணவம் விஷ்ணு என்றும் சக்திமதம் பரதேவதை என்றும் இப்படியெல்லாம் பெயர்களிட்டு அழைத்து வருகின்றன. அத்தகைய பெரியபொருளை அடைதல் ஆத்மசாதகனுடைய குறிக்கோள் என்பது இக்கண்ணியின் கருத்து.

**9-17. எவ்வாறுஇங்கு உற்றுஉணர்ந்தார் யாவர்**
**அவர்தமக்கே**
**அவ்வாருய் நின்றபொருட்டு அன்புவைப்பது**
**எந்நாளோ.**

சர்க்கரையின்சுவை அதைக்கொண்டு சமைக்கப்படும் பட்சணத்துக்கு ஏற்றவாறு மாறியமைகிறது. சர்க்கரையைக் கொண்டு பக்குவப்படுத்தியுள்ள ஜிலேபி, அல்வா, லட்டு, மைசூர்ப்பாகு ஆகியவைகள் தித்திப்புப் பண்டங்களேயாம். அதற்கிடையில் அல்வா தித்திப்பது போன்று லட்டு தித்திப்பதில்லை. இது தின்பண்டங்களைப் பற்றிய உண்மை.

சமய அனுஷ்டானத்தில், அனுஷ்டிக்கும் முறையில் வேறுபாடும் முரண்பாடும் தென்படலாம். சின்னங்களை வைத்து வழிபடுதல், சின்னங்களை உபயோகப் படுத்தலாகாது என்னும் கோட்பாடு, உலகில் இருக்கும் பத்ரம், புஷ்பம் ஆகியவைகளை வைத்து வழிபாடு செய்வது, இவைகளை உபயோகப்படுத்தலாகாது என்னும் கொள்கை இங்ஙனம் வழிபாட்டு முறையிலும் வேறுபாடுகள் பல உள. இவைகளுள் ஏதேனும் ஒரு முறையைப் பக்தி பூர்வமாகச் சாதகன் அனுஷ்டித்து வருவானுகில் அதன் வாயிலாகப் பண்பிலே அவன் மேலோங்கி வருவது வெளிப்படை. ஆத்மசாதகன் அனுஷ்டான முறைகளில் உள்ள வேறுபாடுகளை ஆராய்ந்து மயங்கலாகாது. அவரவர்க்கு ஒத்துள்ள உணவை உண்டு மனிதன் புஷ்டியடைவதற்கு நிகராக வெவ்வேறு முறைகளைக் கையாண்டு பக்தியிலும் ஞானத்திலும் மனிதன் முன்னேற வேண்டும். பரந்த மனப்பான்மையும் புறமதச் சகிப்பும் இன்றியமையாதவைகளாம். பரந்த மனப்பான்மை முன்னேற்றத்துக்கு இன்றியமையாதது என்பது இக்கண்ணியின் உட்பொருளாம்.

# நமக்குத் தேவையான கல்வி

( சுவாமி விவேகானந்தர் )

பொதுமக்களை உயர்த்துவதுதான் என் திட்டமாகும். நம் முன்னோர்கள் வகுத்து வைத்துள்ள வழியை நாம் பின்பற்ற வேண்டும். உயர்ந்த இலட்சியங்கள் யாவற்றையும் மெதுவாகப் பாமர மக்களுக்கு உரியனவாகச் செய்யவேண்டும். அவர்களைப் படிப்படியாக உயர்த்த வேண்டும். சமத்துவ நிலைக்கு அவர்களைக் கொண்டுவர வேண்டும். மதத்தின் மூலமாக அவர்களுக்கு லௌகிகக் கல்வியையும் தரவேண்டும்.

நாடு முழுதும் பள்ளிக்கூடங்களை ஆரம்பிப்பதன் வாயிலாக அவர்களுக்கு நாம் கல்வியைத் தந்துவிட முடியாது. ஏழைச் சிறுவர்கள் உங்களுடைய பள்ளிக்கூடத்துக்கு வருவதைவிட நிலத்தில் போய்த் தொழில் செய்வது அவர்களுக்கு லனைத் தரும். மலை முகம்மதுவிடம் வராவிட்டால் முகம்மது மலையிடம் செல்ல வேண்டும் என்பது கோட்பாடு. அதன்படி ஏழைச் சிறுவர்கள் இருக்குமிடத்துக்குக் கல்வி ஏன் செல்லக்கூடாது என்று நான் கேட்கிறேன்.

கல்வியின் பெரும்பகுதி அவர்களுக்கு வாய் மூலமாகவே தரப்பட வேண்டும். பள்ளிக்கூடங்களை அமைத்து அவர்களுக்குக் கல்வி புகட்டுவதற்கு வேண்டியகாலம் வரும்வரையில் வாய்மொழி மூலமாகவே அவர்களுக்குக் கல்வி தரப்பட வேண்டும். அவர்களுடைய கல்விப் பணிக்காக நிதி திரட்ட முயலுங்கள். தேசப் படங்களையும், உலகப் படங்களையும், தேவையான விஞ்ஞான உபகரணங்களையும் கையில் எடுத்துக்கொண்டுபோய் அவர்கள் இருக்குமிடத்தில் அவர்களுக்குக் கல்வியைக் கொடுங்கள். நிழற்படங்கள் காட்டும் கருவியையும் பயன்படுத்தலாம். ஒவ்வொரு நாள் மாலையிலும் வசதியற்ற எல்லா ஜாதி மக்களையும் ஓரிடத்தில் ஒன்று திரட்டுங்கள். முதலில் அவர்களுக்குச் சமயத்தைப்பற்றி விளக்கிச் சொல்லுங்கள். பிறகு உங்களிடம் உள்ள நிழற்படங்களையும் மற்றக் கருவிகளையும் கொண்டு அவர்களுக்கு விளங்கும் வகையில் நிலநூல், வரலாறு, விஞ்ஞானம் முதலியவற்றைப் போதியுங்கள்.

ஒவ்வொரு கிராமத்துக்கும், ஒவ்வோர் ஊருக்கும் சென்று அங்குள்ள மக்களைத் தமோ குணத்திலிருந்து எழுப்புவீர்களாக. அவர்களுடைய உண்மையான நிலையை அவர்களுக்குப் புரியும்படி செய்யுங்கள். "சகோதரர்களே, எழுந்திருங்கள்; விழிப்படையுங்கள். இன்னும் எவ்வளவு காலத்துக்கு இந்நிலையிலேயே உறங்கிக் கொண்டிருக்கப் போகிறீர்கள்?" என்று கூறி அவர்களைத் தட்டி எழுப்புங்கள். அவர்களுடைய நிலையை எப்படி உயர்த்திக் கொள்ளலாம் என்பதையும் அவர்களுக்குப் புரியும்படி எடுத்துச் சொல்லுங்கள். சாஸ்திரங்களிலுள்ள மகத்தான உண்மைகளை அவர்கள் புரிந்துகொள்ளத் தக்க வகையில் எளிய சொற்களைக் கொண்டு புகட்டுங்கள். மதத்தைப் பிராம்மணன் எந்த உரிமையோடு அணுகுகின்றானே, அந்த உரிமையோடு மதத்தை அணுகுவதற்கு அவர்களுக்கும் உரிமை உண்டு என்பதை அவர்கள் மனதில் பதியச் செய்யுங்கள். மந்திர உச்சாரணை மகாபாவத்தையும் போக்குகிறது. சண்டாளர்கள் என்று சொல்லக்கூடியவர்களுக்கும் சக்திவாய்ந்த மந்திரங்களை உபதேசியுங்கள். வாழ்க்கையின் முன்னேற்றத்துக்கு அவசியமான தொழில், வியாபாரம், விவசாயம் ஆகியவைகளைப் பற்றியும் அவர்கள் எளிதாகப் புரிந்துகொள்ளத் தக்க முறையில் எளிய நடையில் அவர்களுக்கு எடுத்து உரையுங்கள்.

குமாஸ்தா வேலைக்கு அலைந்து திரிவதைவிடத் தொழிலைக் கற்றுக்கொண்டு வாழ்க்கைக்கு வழி தேடிக்கொள்வது எவ்வளவோ மேலானது. வாழ்க்கைக்கு வழிகாட்டித்தராத கல்வி கல்வியாகாது. சிங்கம் போன்ற மன உறுதியையும், நல்லொழுக்கத்தையும், பிறருக்கு உதவ வேண்டும் என்ற ஊக்கத்தையும் தராத கல்வியால் யாது பயன்? எந்தக் கல்வி நல்லொழுக்கத்தை உருவாக்குமோ, மன உறுதியை வளர்க்குமோ, அறிவை விரிவடையச் செய்யுமோ, தன்னம்பிக்கையை வளர்க்குமோ அந்தக் கல்விதான் நமக்குத் தேவை.

# ஆத்ம தரிசனம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1982 இல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[253ஆம் பக்கத் தொடர்ச்சி]

மனிதன் இந்திரிய சுகத்துக்கு வசப்படக் கூடாது. இந்திரிய சுகம் ஒவ்வொன்றும் மனிதனைப் பாழ்படுத்தும் நிலைக்கே எடுத்துச்செல்கின்றது. நாவின் சுவைக்கு அடிமைப்பட்டு மீன் தூண்டிலில் அகப்பட்டு உயிரை இழக்கிறது. ஒளியின் கவர்ச்சிக்கு அடிமைப்பட்டு விட்டில் பூச்சி நெருப்பில் வீழ்ந்து உயிரை இழக்கிறது. வாசனைக்கு வசப்பட்டு வண்டு மலரில் அகப்பட்டு மாய்கிறது. காது என்னும் பொறியை நம்பி மான் வேடன் கையில் அகப்பட்டு அழிகிறது. ஊறு என்னும் உணர்ச்சிக்கு வசப்பட்டு காட்டு யானை கொப்பத்தில் வீழ்ந்து மனிதனுக்கு அடிமையாகிறது. ஒவ்வோர் இந்திரியத்துக்கும் வசப்படும் உயிர்களின் கதி இத்தகையது என்றால் ஐந்து இந்திரியங்களுக்கும் வசப்படும் மனிதனின் கதி என்னவது? இவ்வைந்து இந்திரியங்களுக்கும் வசப்படாதிருப்பவனேபிரம்மச்சரியத்தில் நிலை நிற்க முடியும். பிறகு மனதிலுள்ள காமவாசனையையும் வெல்லவேண்டும். சிவபெருமான் மன்மதனை எரித்தது மனிதன் காமத்தை அழிக்கவேண்டும் என்பதை விளக்குகிறது. கிரஹஸ்தாச்ரமத்தில் புகுவதற்கு முன்பு தவத்தின் மூலமாகக் காமதகனம் செய்துவிடவேண்டும். காமதகனம் செய்த பின்பு இல்லற வாழ்வை மேற்கொள்ளுவார்களானால் அவர்கள் பார்வதி பரமேசுவரன் போன்று தூய மூர்த்திகளாக இருப்பார்கள். அத்தகைய தூய இல்லற வாழ்விலிருந்துதான் கணபதி, கார்த்திகேயன் போன்ற நன்மக்களைத்தோற்றுவிக்க முடியும். கணபதியும், கார்த்திகேயனும் பிரம்ம சொருபமாகின்றார்கள்.

சீதாராமனின் புதல்வர்களாகிய குசன், லவன் என்பவர்கள் இராமனுக்கும் மிக்காராக இருந்தார்கள். இராமனும், சீதையும் செய்த தவத்தின் விளைவாக அவர்களுக்கு அத்தகைய சிறப்பு வாய்ந்த புதல்வர்கள் வாய்த்தார்கள். ரிஷிகள் செய்த தவத்தின் விளைவாக ரிஷிகளுக்கு வாய்த்த புதல்வர்கள் சிறப்புடையவர்களாக இருந்தார்கள். கிரீஷ்சந்திரகோஷ் என்பவர் இராமகிருஷ்ணருடைய சிஷ்யராவார். இராமகிருஷ்ணரை அடைவதற்கு முன்பு அவர் மிகப்பெரும் பாவியாக இருந்தார். இராமகிருஷ்ணரை அடைந்தபின் தம்மைத் திருத்தி அமைத்ததன் விளைவாக ஞானத்தில் விவேகானந்தருக்குப் பக்கத்தில் அமர்கின்ற அளவு சிறந்தவர் ஆனார். ஒரு சமயம் கிரீஷ் சந்திரர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் சம்பாஷித்துக் கொண்டிருக்கையில் பகர்ந்ததாவது: "என் உள்ளத்தில் ஓர் ஆசை இருக்கிறது. நானும் நீங்களும் மீண்டும் ஒரு பிறப்பெடுக்கவேண்டும். அந்தப் பிறப்பில் நீங்கள் எனக்குப் பிள்ளையாகப் பிறக்கவேண்டும்.'' ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிரித்துக்கொண்டு பதில் கூறியதாவது: ''நான் உனக்குப் பிள்ளையாக ஏன் பிறக்க வேண்டும்? என் தாய் தந்தையர் எத்தகைய தூய்மை படைத்தவர்கள் என்பது உனக்குத் தெரியுமா? அவர்கள் எத்தகைய தவவாழ்வு உடையவர்கள் என்பது தெரியுமா? உலகப்பற்றின்றி அவர்கள் வாழ்ந்து வந்தார்கள். அத்தகைய தவசிகளுக்கு நான் பிள்ளையாகப் பிறந்திருக்கிறேன்.''

க்ஷுதிராம் சட்டர்ஜி ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய தந்தையார் ஆவார். அவருடைய பூர்விகம் திரைப்பூர் என்ற கிராமமாகும். அக்கிராமத்தில் ஒரு ஜமீன்தார் இருந்தார். அவர் க்ஷுதிராம் சட்டர்ஜியைப்பொய்ச்சாட்சி ஒன்று கூறும்படி வேண்டிக் கொண்டார். பொய்ச்சாட்சி கூற மறுத்ததால் க்ஷுதிராம் சட்டர்ஜி அக்கிராமத்தை விட்டு வெளியேற நேர்ந்தது. வெறும் ஆளாகத் திரைப்பூரை விட்டு வெளியேறி க்ஷுதிராம் சட்டர்ஜி கமார்புகூர் வந்துசேர்ந்தார். கமார்புகூரில் அவருக்கு ஒரு சிறு வீடு கிடைத்தது. கொஞ்சம் நிலமும் கிடைத்தது. கிடைத்ததை வைத்துக்கொண்டு குடும்பத்தை நடாத்தி வந்தார். அவர் உள்ளத்தில் இருந்த பக்தியின் பெருக்கு அவருடைய இராமேஸ்வர யாத்திரையில்

வெளியாயிற்று. கமார்புகூரிலிருந்து இராமேஸ் வரத்துக்கு க்ஷுதிராம் சட்டர்ஜி கால்நடையாகவே வந்து வழிபாடு செய்துவிட்டுக் கால்நடையாகவே திரும்பிச் சென்றார். தாய் சந்திரமணி தேவி அந்திம காலத்தில் கங்கைக்கரையில் வாழ்ந்து அநுஷ்டானம் செய்துவந்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய தாயும், தந்தையும் அத்தகைய தூய வாழ்வும், தவ வாழ்வும் வாழ்ந்து வந்தார்கள்.

உலக ஆசையை வெல்லுகின்ற அளவுதான் பண்பாடு உண்டாகின்றது. இந்திரியங்களை வென்று பிரம்மச்சரிய விரதத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்குத்தான் சான்றோர்கள் பிள்ளைகளாகப் பிறக்கின்றார்கள். ஆகவே இந்திரிய நிக்கிரகம் செய்து பழகுபவர்கள் வாழ்க்கையில் அரிய செயல் செய்பவர்களாகிறார்கள். பஞ்சேந்திரியங்களைப் பயன்படுத்திப் புறவுலகுடன் நாம் தொடர்பு கொள்கின்றோம். அங்ஙனம் தொடர்பு வைக்கின்றபொழுது நாம் ஆசைக்கு உட்படுகின்றோம். ஆசைக்கு அடிமைப்பட்டு வாழ்கின்ற நிலையில் தெய்விகத் தன்மையை இழந்து வாழ்கின்றோம். ஐம்பொறிகளையும் நன்கு அடக்கிவைக்கின்ற பாங்கில் வாழ்பவர்கள் பிரம்மச்சரியம் கடைப்பிடிப்பவர்கள் ஆகின்றார்கள்.

கிருஷ்ணனுக்கு ஹிருஷிகேசன் என்ற பெயர் உண்டு. ஐந்து இந்திரியங்களுக்கும் அவன் ஈசனாக இருக்கின்றான். கிருஷ்ணனைப்போன்று ரிஷிகளும் ஐந்து இந்திரியங்களையும் அடக்கி ஆண்டுவந்தார்கள். ஞானிகளும், பக்தர்களும், ஆத்மசாதகர்களும் ஐந்து இந்திரியங்களையும் அடக்கி ஆளும் தன்மை உடையவர்களாக இருக்கவேண்டும். இந்திரியங்களைப் பயன்படுத்த வேண்டிய முறை வருமாறு: கண்ணைப் பயன்படுத்தி வடிவங்களைப் பார்க்கின்றோம். பார்க்கின்ற வடிவங்களைநம்முடைய சுகபோகத்துக்கு அமைந்தவை என்று எண்ணாது அவைகள் யாவற்றையும் கடவுள் மயமாகக் கண்டு பழகவேண்டும். அப்பொழுது கண் புனிதமுடையதாகின்றது. சிவனாருக்குத் தியாகராஜன் என்பது ஒரு பெயர். தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்து திரவியங்களைப் பெற்றார்கள். பாற்கடலிலிருந்து தோன்றிய திரவியங்களை அவ்விரு கூட்டத்தினரும் தங்களுக்கிடையில் பங்கு போட்டுக்கொண்டனர். சிவபெருமான் அதில் பங்கு கேட்கவில்லை. பாற்கடலில் விஷம் தோன்றிய பொழுது தேவர்களும், அசுரர்களும் சிவனாரிடம் தஞ்சம் புகுந்தனர். அவர்களைக் காப்பாற்றும் பொருட்டுச் சிவனார் விஷத்தை எடுத்து அருந்தி அருளினார். தியாகராஜனான சிவபெருமான் போன்றே தியாகி ஒருவன் இந்த உலகம் தரும் இன்பத்தில் பங்கு கேட்பதில்லை. உலகத்தில் வரும் கஷ்டத்தைத் தன்னுடையதாக ஏற்றுக்கொள்கின்றான். இந்திரியங்கள் ஒவ்வொன்றையும் சுகபோகத்துக்குரிய கருவிகளாகக் கையாளாது கடவுள் ஞாபகத்தை ஊட்டுவதற்கேற்ற கருவிகளாகக் கையாள வேண்டும். இந்திரியங்களைச் சரீர போகத்துக்காகக்கையாள நினைக்கும்பொழுது நாம் போகி ஆகின்றோம். இந்திரியங்களைக் கையாளுவதன் மூலம் கடவுள் ஞாபகத்தை வளர்த்து வருவோமானால் நாம் யோகிகளாகின்றோம்.

பஞ்சேந்திரியங்களைப் பரமனை ஞாபகப் படுத்துவதற்குரிய கருவிகளாகப் பயன்படுத்தி வரும்பொழுது, பிரம்மச்சரிய விரதத்துக்கு நாம் அஸ்திவாரம் போட்டவர்கள் ஆகிறோம். பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டிக்கும் ஆண்பாலர்கள், பெண்கள் எல்லாரையும் பராசக்தி சொரூபமாகக் கண்டு பழக வேண்டும். பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டிக்கும் பெண்பாலர்கள், ஆண்கள் எல்லாரையும் சிவ சொரூபமாகக் கண்டு பழக வேண்டும். இங்ஙனம் இருபாலார்களுக்கும் இடையில் தூய இணக்கம் ஏற்பட்டு விடுமானால் வாழ்க்கை புனிதம் நிறைந்ததாகிறது. அப்புனித வாழ்க்கையின் விளைவாகச் சமுதாயம் மேன்மை அடைகிறது. பிரம்மச்சரிய விரதம் விரதங்களுள் எல்லாம் மேலான விரதம் ஆகிறது. எனவே அதற்கு மஹாவிரதம் என்று பெயர். மக்களாகப் பிறந்திருக்கின்ற அனைவரும் ஆயுள் முழுவதும் பிரம்மச்சரிய விரதம் அனுஷ்டிக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவர்களும் பிரம்மச்சரியவிரதம் அனுஷ்டிக்கக்கடமைப்பட்டிருக்கின்றனர். விவாகம் செய்து கொள்வதில் குற்றம் இல்லை. விவாகம் செய்து கொள்வதற்கு முன்பே மனதை நன்கு பண்படுத்திவிட வேண்டும். சிவனாரும், அம்பிகையும் காம

தகனம் செய்த பின்பே மணந்து கொண்டனர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரும் சிவபெருமான்போன்று காமதகனம் செய்த பின்பே சாரதா தேவி யாரை மணந்துகொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ண ருக்கு மணம் முடிக்க வேண்டுமென்று கருதிய பெற்றோர்கள் அவருக்குப் பெண் தேட ஆரம் பித்தார்கள். இராமகிருஷ்ணர் அப்பொழுது கடவுள் பித்து உடையவராக இருந்தார். அவ ருடைய தெய்விக மனநிலையை அறிந்து கொள் ளாத மக்கள் அவரைப் பித்தன் என்றே அழைத்துவந்தார்கள். பைத்தியக்காரர் என்ற பெயர் அவரைப் பற்றி எங்கும் பரவியிருந்த தால் அவருக்குப் பெண் கொடுக்க யாரும் முன் வரவில்லை. பெற்றோர்கள் அதைக் குறித்துச் சிறிது கவலைப்பட்டபொழுது ஸ்ரீ ராமகிருஷ் ணர் அவர்களிடம் பகர்ந்ததாவது: "எனக் காக நீங்கள் ஏன் பெண் தேடி இங்கும் அங்கும் அலைகின்றீர்கள்? ஜெயராம் பாடியில் ஸ்ரீ ராமச்சந்திர முகோபாத்தியாயர் வீட்டில் எனக்கென்றே ஒரு பெண் வளர்ந்து வருகின் ருள். அங்குச் சென்றால் உங்கள் விருப்பம் நிறைவேறும்." ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறியபடி பெற்றோர்கள் ராமச்சந்திர முகோபாத்தியாயர் வீட்டுக்குச் சென்று ஐந்து வயது நிரம்பியுள்ள சாரதா தேவியார் என்னும் பெண்ணை ஸ்ரீ ராம கிருஷ்ணருக்கு மணம் பேசி முடித்தார்கள். மணம் நிகழ்வதற்கு முன்பு ஸ்ரீ ராமகிருஷ்ணர் அம்பிகையிடம் பிரார்த்தித்ததாவது: "தாயே, சாரதை என்னும் சிறுமியினுடைய உள்ளத் தில் அவளையும் அறியாது காமவாசனை குடி கொண்டிருந்தால் அதை அறவே நீ துடைத் தெடுத்துவிட வேண்டும்." அவருடைய பிரார்த்தனைக்குத் தேவியும் அனுக்கிரகம் செய்வதை உணர்ந்தார். மணம் முடிந்தான பிறகு வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும்பொழுது ஸ்ரீ சாரதா தேவியாரின் மனம் காம வாசனை யின்றிப் பரநாட்டத்தில் முழுதும் ஈடுபட்டிருந் ததை அறிந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் தேவி தம் பிரார்த்தனையை நிறைவேற்றியதை அறிந்து மகிழ்ச்சி அடைந்தார். சிவபெருமானும், ஸ்ரீ ராமகிருஷ்ணரும் இல்லற வாழ்க்கையில் புகுகின்றவர்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு களாக அமைகின்றார்கள்.

பிரம்மச்சரிய ஆசிரமத்தில் கட்டுப்பாட்டுடன் வாழ்ந்து கிரஹஸ்தாசிரமத்துக்குச் செல்பவன் அவ்வாசிரமத்துக்குத் தகுதியுடையவனாக இருக்கின்றான். இல்லற வாழ்வு வாழ்ந்துவரும் கணவனும், மனைவியும் இரண்டொரு மகப் பேறு பெற்றான பிறகு மனப்பான்மையை மாற் றிக்கொள்ள வேண்டும். மனப்பான்மையில் அவர்கள் சகோதர சகோதரிகளாக வாழ்ந்து வரவேண்டும். அத்தகைய வாழ்வு ரிஷிகள் வாழ்க்கைக்கு நிகரானதாகும். அத்தகைய தூய வாழ்வு வாழ்வதுதான் நம்முடைய தேசிய இலட்சியமாகும். அவ்வுயர் இலட்சியத் திலிருந்து இல்லறத்தார்கள் இன்று பிறழ்ந்து போனதால் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொள்ளும் அளவுக்குப் பண்பில் கீழ்நிலைக்குப் போய் விட்டார்கள்.

இருபது தென்னைமரங்கள் வைக்க வேண் டிய இடத்தில் முப்பது மரங்களை வைத்துவிட் டால் அம்மரங்கள் நன்கு காய்க்கமாட்டா. நெருக்கமாக நெற்பயிர்களை நட்டு விட்டாலும் விளைச்சல் குறைந்து போய்விடும். மக்கள் தொகை அதிகரிக்க அதிகரிக்கப் பண்பட்டவர் களைக் காண்பது அரிதினும் அரிதாகப் போய் விட்டது. எண்ணிக்கை பெரியது அன்று, பண்பாடுதான் பெரியது என்பதை அறிந்து கொள்ளவேண்டும். நம் தேசிய நாகரிகம் பண் பாட்டை அடிப்படையாகக் கொண்டது. சுக போகத்துக்கு வேண்டிய அளவு அனுமதி அளித்துவிட்டுக் குடும்பக் கட்டுப்பாட்டின் மூலம் ஜனத்தொகையைக் குறைப்பது பண் பட்ட சமுதாயத்தின் செயலன்று. தெய்விக வாழ்க்கை வாழ்வதன் மூலம் புலனடக்கம் பயின்று பண்பட்ட சமுதாயத்தை உருவாக்க வேண்டும். அப்பொழுது பிரம்மச்சரிய விரதத்தைக் கையாளுவது மக்களுக்கு எளி தாகப் போய்விடும். மக்கள் பிரம்மச்சரிய விர தத்தை எவ்வளவுக்கெவ்வளவு கடைப்பிடிக் கின்றார்களோ, அவ்வளவுக்கவ்வளவு தெய் விகத் தன்மை உடையவர்கள் ஆகின்றார்கள்.

வாழ்க்கையைப்பற்றிய மற்றொரு கோட்பாடு உண்டு. ஐந்து இந்திரியங்கள் வாயிலாக உலகை நாம் பொருள்படுத்தி வருகின்றோம். ஐந்து இந்திரியங்கள் வாயிலாக நாம் உலக சுகத்தை உணர்கின்றோம். ஐந்து இந்திரியங் களையும் தெய்விக வாழ்க்கையில் திருப்பினால்

நாம் ஞானக்கண்ணைப் பெறலாம். வாழ்க்கையில் சில செயல்களைச் செய்தே ஆகவேண்டும். உணவு உண்ணுமல் நாம் வாழ்ந்திருக்க முடியாது. உணவைச் சுகபோகத்துக்காகஉண்ணக்கூடாது. உள்ளே இருக்கும் ஆத்மனுக்கு உணவை நைவேத்தியமாகப் படைக்கவேண்டும். உணவில் ஆசை வைக்கும்பொழுது கீழ்மை அடைகின்ருேம். உள்ளே இருக்கும் ஆத்மனுக்கு உணவை நைவேத்தியமாகப் படைக்கும்பொழுது நாம் யோகிகள் ஆகின்ருேம். மிகைபட உண்பவனும், குறைபட உண்பவனும் யோகி ஆகமாட்டான். மிகைபட உண்டால் தமோகுண விருத்தி உண்டாகும். குறைபட உண்டால் உடல் பலஹீனம் அடையும். அவ்விரண்டும் ஆத்மசாதனத்துக்கு இடையூறுகள் ஆகும்.

புத்தபெருமான் ராஜகுமாரனுக இருந்த பொழுது தந்தையால் அமைத்துத் தரப்பட்ட மாளிகையில் வளர்ந்து வந்தார். அவருக்கு நாட்டைப் பார்க்கவேண்டும் என்ற எண்ணம் வந்தது. தந்தை துன்பக்காட்சிகள் எவையும் அவர் கண்ணில் படாதவாறு ஏற்பாடு செய்துவிட்டு நாட்டைச் சுற்றிப்பார்க்கச் சித்தார்த்தருக்கு அனுமதி கொடுத்தார். தந்தையின் ஏற்பாடுகள் அனைத்தையும் மீறி, எலும்பும் தோலுமாக உள்ள கிழவன் ஒருவன் சித்தார்த்தரின் கண்களில் தென்பட்டான். ''இது ஒரு விந்தையான பிராணியாக இருக்கிறது. இது என்ன?'' என்று சாரதி சன்னுவைச் சித்தார்த்தன் வினவினுர். சன்னு அளித்த பதிலாவது: '' இது பிராணியன்று. இவன் மனிதன். வயதாகின்ற ஒவ்வொருவரும் இந்நிலையை அடைகின்ருர்கள். இதற்கு விதிவிலக்கு யாரும் இல்லை. உங்கள் தந்தையும், நீங்களும் எதிர்காலத்தில் இந்நிலையை அடைந்தே ஆகவேண்டும்.'' இதைக் கேட்டதும் சித்தார்த்தன் கவலைக்குள்ளானவராக அரண்மனைக்குத் திரும்பிவிடுகின்ருர். இரவு முழுவதும் அவருக்குத் தூக்கம் வரவில்லை. மேலும் மேலும் அவர் துன்பக் காட்சிகள் பலவற்றைப் பார்த்துக் கடைசியாகப் பிணத்தையும் பார்த்தார். அப்பொழுது ''வாழ்க்கையில் அறிந்துகொள்ளாத பகுதிகள் ஏராளமாக இருக்கின்றன; அவற்றையெல்லாம் அறிந்தாக வேண்டும்; அவற்றை அறிந்து கொள்வதற்கு இந்த அரண்மனை வாழ்வு உதவாது'' என்று எண்ணி இராஜ்யத்தைவிட்டு வெளியேறித் தவவாழ்வில் ஈடுபட்டார்.

உடலைப் பட்டினி போடுவது தவம் என்றெண்ணினுர். உடலைப் பட்டினி போடும் பொழுது உடலின் வலிவு குன்றிப்போய்விட்டது. உடல் நிமிர்ந்து உட்காரவும் சக்தியற்றதாகப் போய்விட்டது. அப்பொழுது திருமண ஊர்வலத்தில் வீணையோடு பேசுகின்ற பாங்கில் பாடிய பாடலொன்று சித்தார்த்தன் காதில் விழுந்தது. அப்பாடலின் கருத்தாவது: '' ஏ, வீணையே, உன்னிடத்திலுள்ள நரம்புகளைத் தளர்த்திவிட்டால் உன்னிடத்திலிருந்து இனிய ஓசை வராது. நரம்புகளை முறுக்கிக் கட்டினுலும் அவை தெறித்துப்போய்விடும். அப்பொழுதும் உன்னிடத்திலிருந்து இனிய ஓசையை வெளிப்படுத்த முடியாது. நரம்புகளை நடுநிலையில் வைத்தால் உன்னிடத்திலிருந்து இனிய ஓசையை எழுப்பலாம்.'' இக்கருத்து சித்தார்த்தனுடைய மனதில் தெளிவாகப் பதிந்தது. சரீரம் வீணைக்குச் சமமாகும். ராஜபோகத்தில் சரீரத்தை அரண்மனையில் வைத்திருந்தால் அது தளர்ந்ததற்கு நிகராகப் போய்விட்டது. பிறகுபட்டினிபோட்டு வாட்டியது தெறித்துப்போனதற்கு நிகர் ஆய்விட்டது. சரீரத்தை நடுநிலையில் வைத்திருந்தால்தான் அதன் மூலம் வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்துகொள்ள முடியும். மிகைபட உண்பவனும், குறைபட உண்பவனும் யோகியாகமாட்டான். மிகைபடத் தூங்குபவனும், குறைபடத் தூங்குபவனும் யோகி ஆகமாட்டான். மிகைபட உழைப்பவனும் குறைபட உழைப்பவனும் யோகி ஆகமாட்டான். அளந்தெடுத்து வாழ்க்கை நடத்துவோமானுல் அற்புதமான காரியத்தைச் சாதிக்கலாம். பஞ்சேந்திரியங்களை முறையாக அடக்கி ஆளுதல் வேண்டும். தெய்வபக்தி ஓங்க ஓங்கத்தான் காமத்தை அறவே வெல்லுவது சாத்தியமாகும். பக்தி இல்லாதவர்கள் காமத்தை வெல்லுவது கஷ்டம். மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு பிரம்மச்சரிய வாழ்க்கையைக் கடைப்பிடிக்கிருர்களோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் வாழ்கின்ற சமுதாயம் மேன்மையடைகின்றது. பதினுன்கு வருஷகாலம் நைஷ்டிக பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்து

வருகின்றவர்களுக்கு ஞானக்கண் தானாக உண்டாகின்றது. தான் ஆத்ம சொரூபம் என்பதைப் பிறர் புகட்டி அறிந்துகொள்ளமுடியாது. தான் ஆத்ம சொரூபம் என்பதைத் தானே அறியவேண்டும். "தன்னை அறிந்தால் தலைவன் மேல் பற்றலது பின்னை ஒரு பற்றும் உண்டோ பேசாய் பராபரமே" என்பது தாயுமானவர் வாக்கு. பெண்ணொருத்தி பக்குவமடைகின்ற பொழுது பக்குவமடைந்ததைத் தானே அறிகின்றாள். அங்ஙனம் ஆத்மசாதகன் தான் பக்குவம் அடைவதைத் தானே அறியலாம். தான் பக்குவம் அடைகின்றபொழுது தனக்கும் தலைவனுக்கும் உள்ள தொடர்பு நன்கு விளங்குகின்றது. நாம் பக்குவமடையும் பொருட்டு நாம் எத்தகைய மனப்பாங்கு உடையவர்களாக இருக்கவேண்டுமென்பதை ஆஞ்சநேயன் விளக்குகின்றான். "ஆஞ்சநேயா, நீ என்னை எவ்வாறு கருதுகின்றாய்?" என்று இராமன் ஆஞ்சநேயனைக் கேட்டார். அதற்கு ஆஞ்சநேயன் பகர்ந்ததாவது: "சரீரபுத்தி என்னிடம் இருக்கும்பொழுது நான் உன்னுடைய தாசன். நீ எனக்குத் தலைவன் ஆகின்றாய். ஜீவபோதத்தில் இருக்கும்பொழுது, நான் உன்னுடைய அம்சமாக உணர்கின்றேன். ஆத்ம போதம் எழும்பொழுது நானே நீ, நீயே நான் என்று உணர்கின்றேன்."

சரீர உணர்வைக் கடந்து செல்வதுதான் வாழ்க்கையின் குறிக்கோள். அதன் பொருட்டுப் பஞ்சேந்திரியங்களைத் தெய்விக வழியில் செலுத்துதல் வேண்டும். உள்ளத்தில் காமம் எழ இடம்தராது பார்த்துக்கொள்ளவேண்டும். தீவிரமாகப் பரநாட்டம் கொண்டிருக்கவேண்டும். இம்முறையில் பதினான்கு ஆண்டுகள் வாழ்ந்து வந்தால் ஞானக்கண் உண்டாகின்றது. அப்பொழுது தான் ஆத்மசொரூபம் என்பதை ஒருவன் அறிகின்றான். சிவனார் கோர தபஸ் செய்து காமதகனம் செய்தபின் அன்னை பராசக்தியை மணம் புரிந்தார். கோரதபஸ் செய்யச் சாத்தியம் இல்லாதவிடத்தும் இந்திரிய நிக்கிரகம் பழகும் அளவு பண்பாடு வருகின்றது.

பெரிய பணக்காரன் கோடிக்கணக்கில் சம்பாதிக்கின்றான். பத்து, நூறு சம்பாதிப்பவனும் பணக்காரன். ஞானி இந்திரியங்களை அறவே நிக்கிரகம் செய்துள்ளான். முழுவதும் இந்திரிய நிக்கிரகம் செய்ய முடியாவிட்டாலும், இந்திரிய நிக்கிரகம் செய்கின்ற அளவுக்கு நன்மை வந்து வாய்க்கின்றது. ஒருவன் எவ்வளவுக்கெவ்வளவு இந்திரியங்களுக்கு அடிமைப்படுகின்றானோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் தன்னைத் தானே பாழ்படுத்திக்கொள்கின்றான். இந்திரிய நிக்கிரகம் செய்து மக்கள் வாழ்ந்து வருவார்களானால் மக்கள் தொகை குறையும். மக்கள் பண்பாட்டில் உயர்வடைவார்கள். ஜனத்தொகை குறைகின்ற அளவு பண்பாடு ஓங்குகிறது. ஜனத்தொகை அதிகரிக்கும் பொழுது, சமுதாயம் பண்பாட்டில் கீழ்நிலையை அடைகின்றது.

நம் ரிஷிகள் பரத்தில் ஈடுபடும் வாழ்க்கையை நமக்குக் காட்டித் தந்துள்ளார்கள். "தவம் செய்வார் தம்கருமம் செய்வார் மற்றல்லார் அவம் செய்வார் ஆசையுட்பட்டு" என்பது வள்ளுவர் வாக்கு. தவம் செய்பவர்கள் பிரம்மச்சரியத்தைச் சரியாகக் கையாளமுடியும். தவம் எல்லார்க்கும் பொதுச்சொத்து. பிரம்மச்சரிய விரதம் எல்லார்க்கும் உரிய தெய்விகச் சொத்து ஆகும். தவம் செய்தலையும், பிரம்மச்சரிய வாழ்வையும் ஒருவன் கடைப்பிடித்து வருவானாகில் பண்பாட்டில் அவன் மேலே வருவான். அவன் பூலோகத்தில் நடமாடும் தெய்வமாகத் திகழ்வான். அவன்தான் உலகுக்குப் பெரிய நலன் செய்ய முடியும். அவனிடம் ஆற்றலும், அறிவும் வேண்டியவாறு அமைந்திருக்கின்றன. வாழ்க்கை முறை திருந்திய வாழ்க்கையாக அமையும்போது வாழ்க்கையின் குறிக்கோளாகிய இறைவனை அடைதல் எளிய காரியமாகின்றது. பிரம்மச்சரிய விரதத்தையும், தவத்தையும் தீவிரமாகக் கடைப்பிடித்துத் திருவருளைப் பெறவேண்டும். ஆத்ம சாதகர்கள் ஒவ்வொருவரும் கண்ணும் கருத்துமாகப் பிரம்மச்சரிய விரதம் காப்பாற்றித் தவவாழ்வில் ஈடுபட்டுவருவார்களாக. பிரம்மச்சரியத்தின் மூலம் மனம் தூய்மை அடைகின்றது. மனம் தூய்மை பெறாதவர்கள் எவ்வளவுதான் சாஸ்திரங்கள் கற்றாலும், கேட்டாலும் ஆத்ம தரிசனம் பெற முடியாது. தூயமனது கொண்டுதான் ஆத்ம தரிசனம் செய்ய இயலும். (முற்றும்)

---

# துளசிதாசர் சரிதம்

(256ஆம் பக்கத் தொடர்ச்சி)

துளசிதாசர் வாழ்வில் இருள் சூழ ஆரம்பித்தது. அவர் சத்சங்கத்தை விடுத்துத் துர்ச்சங்கத்தைச் சேர்ந்தார். தீய சேர்க்கையாலும், யௌவனப் பருவத்தில் இருந்தமையாலும் அவர் மனம் காமத்துக்கு உட்பட்டது. தன் சொந்த வீட்டுக்குப் போகாமலும், அரசாங்கக் காரியத்தைக் கவனியாமலும் இருப்பதை அவருடைய தாய் பார்த்துக் கவலை கொண்டாள். அவருடைய போக்கை மிகவும் கண்டித்தாள். ஆனால் துளசிதாசரோ தாயின் சொல்லைக் கேட்டுத் திருந்தவில்லை. கடமையை மறந்து, தாயை மறந்து காமக்கிழத்திகள் வீட்டில் வாழ்நாளைக் கழித்து வந்தார்.

யாத்திரைக்குச் சென்றிருந்த தந்தையார் திரும்பி வந்தார். மைந்தனுடைய ஒழுக்கக் கேடான செயலைக் கேட்டுக் கவலைக்குள்ளானார். மைந்தனைக் கூப்பிட்டு மிகவும் கடிந்து கொண்டார். மைந்தனை அரசனுடைய சோலையில் வைத்து அங்கே ஸ்திரீகள் யாரும் உள்ளே போகாமல் காவல் போட ஏற்பாடு செய்தார். சில பிராம்மண வாலிபர்களை அழைத்துத் தம் மைந்தனுடன் சேர்ந்து வேத அத்தியயனம் செய்வதற்கும் ஏற்பாடு செய்தார். வேதாத்தியயனமும், ஜபதபமும் சதா காலமும் நிகழும்படி ஏற்பாடு செய்து விட்டு ஆத்மாராம் பிரம்ம நிஷ்டை அடைவதற்கு வேண்டிய சாதனங்களைச் செய்து வந்தார்.

துளசிதாசருக்கு அங்கும் சோதனை நிகழ்ந்தது. அவருடைய உள்ளத்தைக் கலக்க அச் சோலையில் ஒரு கன்னிகை நின்று கொண்டிருப்பதை ஒரு நாள் துளசிதாசர் பார்த்தார்.

அக்கன்னிகையைப் பார்த்ததும் துளசிதாசர் மதிமயக்கம் அடைந்தார். துளசிதாசருடைய நண்பர்கள் அவருடைய காம மயக்கத்தைத் தெளிவிக்க உபதேசங்கள் செய்தார்கள். அவ் உபதேசங்கள் பயனளிக்கவில்லை. துளசிதாசருடன் இருந்த தோழர்கள் அவருடைய தந்தையிடம் போய்க் கூறியதாவது: "சுவாமி, உங்கள் குமாரன் துளசிதாசர் உத்தியான வனத்திலிருந்தஒரு கன்னிகையின் மீது மோகம் கொண்டார். அக்கன்னிகை ஆகாய மார்க்கமாய்ப் போய் விடவே துளசிதாசர் அவள்மீது கொண்ட மோகத்தினால் தம்மை மறந்து வாயில் வந்தபடி பிதற்றிக் கொண்டிருக்கின்றார். ஆகையால் சீக்கிரம் அவரிடம் சென்று அவருடைய மயக்கத்தைத் தெளிவியுங்கள்."

ஆத்மாராம் இதைக் கேட்டதும் மகனிருக்கும் இடத்துக்கு ஓடினார். அங்கு மகன் காமாக்கினியால் தகிக்கப்பட்டு ஸ்மரணை இழந்தவனாய் "பெண்ணே, கண்ணே" என்று பிதற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். ஆத்மாராம் தம் மகனின் மயக்கத்தைப் போக்கி அறவுரை பகர்ந்ததாவது: "மகனே, உன் மனைவியை அன்றி வேறு ஸ்திரீயை மனத்தில் கொள்ளாதே. நான் கூறும் வார்த்தையைத் தள்ளி விடாதே. கொலை, காமம், பொய் இவற்றைத் தள்ளிவிடு. அழியும் பொருளைத்தேடி ஓடாதே. ஜபதபங்களை நிறுத்தி விடவேண்டாம். தெய்வ பக்தியைக் கைவிடாதே." மகனுடைய மனதை மாற்றி அக்பருடைய அரண்மனையிலிருந்து அழைத்துக்கொண்டு தம் முன்னோர் வாழ்ந்த ஊராகிய ராஜாபூருக்குத் தம் குடும்பத்துடன் சென்றார். அனைவரையும் கிராமத்திற்குக் கொண்டு சென்று ஆங்குத் தம் குடும்பத்தை ஸ்தாபனம் செய்தார். தம் மனைவியைப் பார்த்து "பெண்ணே, உன் குமாரனை வெகு பத்திரமாகக் காப்பாற்றிவா. உன் மருமகளாகிய மமதாதேவியையும் உங்களுடன் வைத்துக்கொண்டு சுகமாயிருங்கள். நான் சாதுக்கள் வாழும் நைமிசாரண்யத்துக்குச் சென்று தவம் செய்து வருகின்றேன். சம்சாரத்திலிருந்து அடைந்த பலன் எனக்குப் போதும். உனக்கு ஏதாவது குறை நேரிடுமாயின் நைமிசாரண்யத்துக்குத் தடையின்றி வரலாம். அங்குச் சாதுக்கள் தரிசனம் பெற்றுப் பிரம்மானந்தம் அடையலாம்" என்று எடுத்துக் கூறி ஆத்மாராம் நைமிசாரண்யம் புறப்பட்டார். துளசிதாசரும் தந்தை கூறிய மேலான உபதேசத்தைக் கேட்டுத் தந்தையின் கால்களில் வீழ்ந்து தாமும் அவருடன் வருவதற்கு அனுமதி கேட்டார். அப்பொழுது தந்தை பகர்ந்ததாவது: "குழந்தாய், நீ என்னுடன் வருவதற்கு இச்

சித்தது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். விஷயபோகங்களை அநுபவித்து விரக்தி அடைந்து துறவு கொள்ளவேண்டும். ஒருவர் போதனையைக் கேட்டு விரக்தி அடைபவன் சிலநாளில் விஷயபோக எண்ணங்களால் பீடிக்கப்படுவான். நீ விஷய ஞாபகமுள்ள வன் உன்னுடைய மனைவியை விட்டு என்னு டன் வருவது கூடாது. இன்னும் சிலகாலம் உன் மனைவியுடன் கூடிவாழ்ந்து உனக்கு விரக்தி ஏற்பட்டபின் வரலாம்." இவ்வாறு கூறிவிட்டு அவர் நைமிசாரண்யத்துக்குக் கிளம்பினர்.

ஆத்மாராம் வீட்டைவிட்டுச் சென்ற பிறகு அவர் மனைவி தன் மருமகளை அழைத்துத் தன் குமாரனிடம் ஒப்புவித்தாள். "மகனே, நீ இன்று முதல் உன் மனைவியைத் தவிர வேறு யாரையும் கனவிலும் நினைக்கக் கூடாது" என்று மகனுக்குக் கட்டளையிட்டாள்.

துளசிதாசர் உள்ளத்தில் காமநோய் அகல வில்லை. மோகத்தில்அமிழ்ந்துதன்மனைவியோடு சிற்றின்பத்திலேயே மூழ்கிக் கிடக்கலானர். சிலநாட்களுக்குப் பிறகு அரசன் துளசிதாச ரைப் பார்க்க ஆசைப்பட்டான். துளசிதாசரை அழைத்து வரும்படி பல்லக்கையும், ஆட்களை யும் அனுப்பிவைத்தான். அரசனுடைய ஆட் கள் பல்லக்குடன் ராஜாபூருக்குப்போய்த்துளசி தாசரிடம் அரசனுடைய கட்டளையைத் தெரி வித்தனர். துளசி தாசர் மனைவியை விட்டுப் பிரிய விரும்பாததால் காவலாளர்களிடம் தற் சமயம் வருவதற்கில்லை என்று கூறி அனுப்பி விட்டார். காவலாளர்கள் அரசனிடம் சென்று துளசிதாசர் கூறியதைத் தெரிவித்தார்கள். அரசன் இன்னும் சிலநாட்கள் கழித்து மறுபடி யும் காவலர்களைத் துளசிதாசரை அழைத்து வரும்படி அனுப்பினன். துளசிதாசர் இப்பொழு தும் காவலர்களுடன் செல்ல மறுத்துவிட்டார். அரசனுக்கு அது வியப்பாக இருந்தது.

இதை அறிந்த ஆத்மாராமின் மனைவி தன் மகனை அழைத்து "மகனே, அரசன் உன்னைப் பார்க்கும் பொருட்டுப் பலமுறை பல்லக்கை அனுப்பியும் நீ போகாமல் இருக்கலாமா? உப் பிட்டவரை உள்ளளவும் நினைக்கவேண்டும் என் னும் பழமொழியை மறந்துவிட்டாயா? மாதம் ஆயிரம் பொன் கொடுத்து ஆதரித்து வரும் அரசனுடைய ஆணையை மறுக்கலாமா? நாள் முழுவதையும் சிற்றின்ப போகத்திலேயே கழித்து வருகின்ருயே! நன்ருக ஓதி உணர்ந்தவ ஞக இருந்தும், சகல நியாயங்களையும் அறிந் திருந்தும் இத்தகைய அபகீர்த்திக்கு உள்ளாக லாமா? யாவரும் உன் நடத்தையைக் குறித்து நிந்தனை பேசி ஏசுகிருர்கள்" என்று மகனுக்கு நிலைமையை எடுத்துக் கூறினுள். பின் தன் மருமகளைப் பார்த்து "அம்மா, நீ உன் தந்தை யின் வீட்டுக்குப் போய்விடு" என்று கட்டளை யிட்டாள். மாமியாரின் கட்டளையை அவள் தன் கணவரிடம் கூறியபொழுது அவர் மனைவி யைத் தந்தை வீட்டுக்குப் போக அனுமதிக்க வில்லை.

சிலநாட்கள் கழித்து அரசன் சேனைகளோடு ராஜாபூருக்குப் பக்கத்தில் உள்ள சோலையில் வந்து இறங்கி மந்திரிகளை அழைத்துத் துளசி தாசரிடம் தன் வரவைத் தெரிவித்து அவரை விரைவில் அழைத்து வருமாறு கட்டளையிட் டான். மந்திரிகள் அரசன் கட்டளையைத் துளசி தாசரிடம் சென்று தெரிவிக்க,மனைவியைப் பிரிந் திருக்க மனம் இல்லாதவராய் மந்திரிகளுடன் சென்று அரசனைப் பார்க்க மறுத்துவிட்டார். மந்திரிகள் கோபித்துக்கொண்டு துளசிதாச ரின் மறுப்பை அரசனிடம் தெரிவித்தார்கள். கடைசியாக அரசன் துளசிதாசர் வீட்டுக்கே சென்ருர். அரசன் தம்மைப் பார்ப்பதற்காகத் தம் வீட்டிற்கு வந்ததை அறிந்த துளசிதாசர் அரசனைப்பார்த்தால் தம்மை மனைவியிட மிருந்து பிரித்து அழைத்துக்கொண்டு போய் விடுவார் என்று எண்ணி அரசனைக் காண மறுத்து ஓர் அறைக்குள் போய்ப் புகுந்து கொண்டார். அவருடைய தாய் தன் மருமகள் மமதாதேவியைக் கடிந்துகொண்டாள். மமதா தேவி தன் கணவனிடம் சென்று "நீங்கள் இன்று அரசனிடம் சென்று பேசாவிட்டால் நான் உயிரை விட்டு விடுவேன்" என்று கூறினுள். மமதாதேவி உயிரை விட்டுவிடுவாள் என்று பயந்து துளசிதாசர் அரசனிடம் சென் ருர். அரசன் துளசிதாசரைத் தன் குரு ஆத்மா ராம் என்று நினைத்து அவரைத் தன் பட் டத்து யானைமேல் ஏற்றிக்கொண்டு டில்லி நோக்கிப் போய்விட்டான்.

அரசன் துளசிதாசரை அரண்மனைக்கு அழைத்துச் சென்றவுடன் அவருடைய தாய்

தன் மருமகள் மமதாதேவியை அவளுடைய தாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டாள். அரசனுடன் சென்ற துளசிதாசர் போகும் வழியெல்லாம் தம் மனைவியை நினைந்து நினைந்து மனம் உருகிக் கொண்டே போனர். வழியிலேயே அரசனிடம் பலவந்தமாக விடைபெற்றுக்கொண்டு கன்றை நாடிவரும் பசுவைப் போலத் தம் வீட்டுக்கு ஓடிவந்தார். வீட்டில் பல இடங்களில் தேடியும் மனைவியைக் காணவில்லை. அவர் வருத்தமடைந்தவராய்த் தாயிடம் சென்று ''மமதாதேவி எங்கே?'' என்று கேட்டார். "உன் மனைவி பிறந்த வீட்டுக்குப் போயிருக்கின்ருள். விரைவில் திரும்பி வந்துவிடுவாள். அதற்குள் ஏன் இவ்வளவு பதைபதைப்பு உடையவனக இருக்கின்ருய்?'' என்று அந்தத் தாய் கூறினள். தாய் கூறிய மொழியைக் கேட்டுத் துளசிதாசர் மிகவும் வாட்டமடைந்தார். காம வாசனையினல் உந்தப்பட்டு வீட்டைவிட்டு வெளியே புறப்பட்டுத் தம் மனைவி இருக்கும் ஊரை நாடி ஓடத் தொடங்கினர். அவ்வேளை காற்றும், மழையும் சேர்ந்து அவருடைய ஓட்டத்தைத் தடைசெய்தன. அவற்றைச் சட்டை செய்யாமல் துளசிதாசர் ஓடிக்கொண்டேயிருந்தார். வழியில் யமுனை நதி குறுக்கிட்டது. ஆறு வடியும் வரை காத்திருக்காது யமுனை நதியில் இறங்கி ஆற்றில் மிதந்து செல்லும் பிரேதத்தைத்துணையாகக்கொண்டு ஆற்றைக்கடந்தார். மாமனர் வீட்டைநோக்கிவிரைவாகப் போனர். வீடு பூட்டி இருந்தது. காரிருளில் பலமான காற்றுடன் மழையும் பலமாகப் பெய்துகொண்டிருந்தது. வீடு பூட்டியிருந்தமையால் உள்ளே போகமுடியவில்லை. வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்து ''மமதாதேவி, மமதாதேவி'' என்று பல முறை கூப்பிட்டார். உள்ளிருந்து பதில் எதுவும் வரவில்லை. வீட்டின் சன்னல்மட்டும் திறந்திருப்பதைப் பார்த்தார். மகிழ்ச்சியடைந்தவராகச் சன்னல் கம்பியைப் பிடித்து மேலே பார்த்தபொழுது ஒரு மரக்கிளையிலிருந்து பாம்பு ஒன்று சுவர் ஓரமாகத் தொங்கிக்கொண்டிருந்தது. அப்பாம்பைக் கயிறென்று நினைத்துத்துளசிதாசர் அதைப்பற்றிப் பிடித்து சுவர் ஏறி அறைக்குள் குதித்தார். ஆங்கு மனைவியைப் பலவாறு துதித்தார். அவருடைய உடம்பெல்லாம் சேறு நிறைந்திருந்ததாலும், தலைவிரி கோலமாய் அவர் இருந்ததாலும் பேய் போலக் காட்சி அளித்தார். மமதாதேவி தன் கணவர்தாம் அக்கோலத்தில் இருக்கிருர் என்பதை அறிந்து அவருடைய காலில் விழுந்து வணங்கினள். பக்கத்தில் மாமன், மாமி, மைத்துனர்கள் இருந்ததையும் பொருட்படுத்தாது தம் காம வேதனையைத் தணிக்க வருமாறு மனைவியின் கரத்தைப் பிடித்து இழுத்தார். துளசிதாசரை வாயில் வந்தபடி ஏசிவிட்டு அவர்கள் அறையை விட்டு வெளியே போய்விட்டனர். அப்பொழுது மமதாதேவி தம் கணவனைப் பார்த்து "இந்த அறைக்குள் நீங்கள் எப்படி வந்தீர்கள்?" என்று கேட்டாள். ''சன்னலுக்குப் பக்கத்தில் தொங்கிக்கொண்டிருந்த கயிற்றைப் பற்றிக்கொண்டு மேலேறி அறைக்குள் வந்தேன்'' என்ருர் துளசிதாசர். ''அக்கயிற்றைப் பார்க்கலாம் வாருங்கள்" என்று மமதாதேவி கணவனை அழைத்துக்கொண்டு வெளியே வந்தாள். ஆங்குப் பாம்பு தொங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். "நாதா, என் மீது இருக்கும் வாஞ்சையால் அன்றே மழையில் நனைந்து, காற்றில் அலைந்து, பிணத்தின் மீது ஏறி ஆற்றைக்கடந்து, பாம்பைப் பிடித்து மேலேறி அறைக்குள் வந்து மற்றவர்கள் இழிவாகப் பேசும்படி வாயில் வந்தபடி உளறினீர்கள். என்மேல் இருக்கும் இம் மோகத்தை விட்டு ஸ்ரீமந் நாராயணன் மீது அன்பைச் செலுத்துங்கள். அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகனய் இருக்கும் அப்பெருமான் உங்கள் உள்ளத்தில் உள்ள காமத்தைப் போக்கிமேலான பேரின்பத்தைக் கொடுப்பார். முனிவர்களும், தேவர்களும் விரும்பும் பிரம்மானந்தத்தை விடுத்து, இந்த நாற்றமெடுத்த உடம்பின் மூலம் கிடைக்கும் சிற்றின்ப போகத்தைவிரும்பிப் பிறர் நகைக்கும்படி நடந்து கொள்ளலாமா? காமத்தால் யயாதி மன்னன் முதுமையும், நோயும் அடைந்ததை அறியீரோ? காமமே நரகம்; காமமே பந்தம்; காமமே நோய்; காமமே சோகம்; காமமே மரணம். காம வலையில் சிக்கினவர்களுக்குப் பரகதி என்றைக்காவது கிடைக்குமா?'' என்று கணவனுக்கு மமதாதேவி உபதேசம் செய்தாள்.

(தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-180

*987.* **अनघा அநகா**— பாபமும் துக்கமும் இல்லாதவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

முறைதவறி நடந்துகொள்கிற ஒருவனைப் பாபி என்று சொல்லுகிறோம். அன்னை பராசக்தியோ எந்தவிதமான குறைபாட்டையோ முறைதவறிய நிலையையோ உடைத்திருப்பவள் அல்லள். யாண்டும் நிறைநிலையே அவளுக்குச் சொந்தமாகிறது. அத்தகைய நிறைநிலையினின்று அவள் பிசகுவதும் கிடையாது. ஆதலால் துக்கத்துக்கும் பரதேவதைக்கும் வெகுதூரமாம்.

நீர்நிலை ஒன்று எவ்வளவுக்கெவ்வளவு சிறியதோ அவ்வளவுக்கவ்வளவு அதை மலினப் படுத்த இயலுகிறது. சிறிய குளம் ஒன்றைத் துணி துவைத்தோ ஆடுமாடுகளைக் குளிப் பாட்டியோ எளிதில் மலினப்படுத்தலாம். ஆனால் பரந்த நீர்ப்பரப்பில் எத்தனை துணிகளைத் துவைத்தாலும் கால்நடைகளைக் குளிப் பாட்டினாலும் அதனால் அது மலினப்படுவதில்லை. கோடையில் நீரோட்டம் குறைந்து பட்டுப் போய்த் தேங்கி ஓடுகிற சிற்றாறு ஒன்றைச் சுலபத்தில் அழுக்குப் படுத்தலாம். வேகம் குறைந்திருப்பதை முன்னிட்டுச் சிற்றோடை ஒன்றில் நீர் தானாகவே மாசுபடுகிறது. பின்பு மழை பெய்து பெருவெள்ளம் பெருக்கெடுத்து ஓடுமாகில் அவ்வோடையில் படிந்து கிடக்கும் அழுக்கு, குப்பை, கூளங்களை நீர்ப் பெருக்குச் சுலபத்தில் அகற்றிவிடுகிறது. இவையாவற்றுக்கும் மேலாகக் கடலைக் கலக்கி அழுக்குப்படுத்த யாருக்குமே இயலாது. அழுக்குப் படிந்துள்ள ஓடைகளும் நதிகளும் ஓயாது கடலில் வந்து ஒன்றுபடுகிற இடத்தும் கடல் நீர் யாண்டும் தன்மயமாய் இருக்கிறது. ஆகவே அகண்டத்தை எட்டுதற்கேற்பப் பொருள் ஒன்றில் பொல்லாங்கு எதையும் காணமுடியாது. பொல்லாங்கிற்கு அது உட்படுவதும் இல்லை.

பரதேவதையாகிய அன்னை பராசக்தியோ பூரணியாக, அகண்ட வஸ்துவாக யாண்டும் இலங்கிக் கொண்டிருக்கின்றாள். ஆதலால் அவளை அழுக்குப் படியும்படி செய்வது யாருக்குமே சாத்தியப்படாது. யாண்டும் அநகாவாக, மாசுபடியாதவளாக அவள் மிளிர்ந்து கொண்டிருக்கின்றாள். அதுமட்டுமன்று; காலக்கிரமத்தில் தேய்ந்தோ அழுக்குப்படிந்தோ போவது சிறிய பொருள்களுக்குச் சாத்தியம். பெரிய பொருளாகிய பெரியநாயகி அம்மைக்கு அத்தகைய குறைநிலை ஏதும் கிடையாது. தொல்லுலகம் என்று அவளுடைய சொரூபத்தின் ஒரு பகுதியைப்பற்றிப் பகர்கிறோம். இவ்வுலகம் மிகமிகப் பழையது எனினும் யாண்டும் புத்தம் புதியதாகவே அது காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறது. அன்னை பராசக்தியானவள், அநகா, பழுதுபட்டுப் போகாதவள் என்பதற்குச் சான்றாக இந்நிலவுலகமே அமைந்திருக்கிறது.

இனி, துயரத்துக்கு ஆளாகிற நிலை ஜீவர்களுக்கு உரியதாம். ஜீவாத்மாவுக்கு விளக்கமே துயரப்பட்டுக்கொண்டிருப்பது என்பதாம். தான் விரும்பியது ஒன்று தனக்கு அகப்படாவிட்டால் குழந்தை ஒன்று அதைக் குறித்துத் துயருறுகிறது. எங்கெல்லாம் ஆசை நிறைவேறுவதில்லையோ ஆங்கெல்லாம் துயரம் தாண்டவமாடுகிறது. இத்தகைய குறைநிலையை உலகெங்கும் உள்ள உயிர்கள் அனைத்திடத்தும் காணலாம். ஆயினும் அத்தனை கோடி உயிர்களின் தொகையாக அமைந்துள்ள அன்னை பராசக்தியானவள் துக்ககரமாகக் காட்சிதரவேண்டும். ஆனால் உண்மை அதுவன்று. பரமானந்த சொரூபிணியாகவே அன்னை பராசக்தி யாண்டும் இலங்கிக்கொண்டிருக்கின்றாள். சிறுதுளிகள் பல ஒன்றுகூடி நீர்ப்பெருக்காவது இயற்கையின் பாங்கு. அங்ஙனம் துன்பத்தில் வருந்திக்கொண்டிருக்கின்ற உயிர்களின் தொகை உலகெங்கும் பெருந்துன்பமாகக் காட்சி தரவேண்டும். ஆனால் உண்மை அதுவன்று.

சிற்றுயிர்கள் படும் துன்பம் அந்தந்த உயிரோடு ஒடுங்கிப் போகிறது. அக்ஞானத்தின் விளைவால் அது வருவதால் அதிவிரைவில் அத்துயரம் மறைந்துபட்டுப் போகிறது. இதை ஒட்டிய கொள்கை ஒன்று உண்டு. 'மானுடா, நீ சிரிக்கின்றபொழுது உலகம் முழுதும் உன்னோடு கூடிச் சிரிக்கிறது. ஆனால் நீ அழுகின்ற

பொழுது உன்னோடு கூடி அழுவார் யாருமில்லை. நீ தன்னந்தனியனாக அழுகின்றாய்.' இது முற்றிலும் உண்மை. ஏனென்றால் துக்கத்துக்குப் பிறப்பிடம் அஞ்ஞானம். ஆனந்தத்திற்குப் பிறப்பிடம் பரவஸ்து. யாண்டும் நிலைத்துள்ள பரவஸ்துவிடமிருந்து வருகிற ஆனந்தம் உயிர்கள் அனைத்துக்கும் சொந்தம். ஆங்காங்கு அஞ்ஞானம் சிறிய பாங்கில் வடிவெடுத்து சிற்றுயிர்களிடத்துத் தோன்றுவதால் அப்போதைக்கப்போது அது மறைந்துபட்டுப் போகிறது. ஆகையால்தான் சிற்றுயிர்கள் படுகிற வேதனையை அன்னை பராசக்தியோடு இணைப்பது சாத்தியப்படுவதில்லை.

அன்னை பராசக்தி பூரணியாயிருப்பதால் அவள் பரமானந்தமே வடிவெடுத்தவள். அவள் குறையில்லா நிறை நிலைக்குச் சொந்தம். நிறை நிலையில் துன்பத்துக்கு இடமில்லை அன்னையை வழுத்துதற்கேற்ப ஆத்ம சாதகனும் பாபமற்றவனாகின்றான். ஆனந்தத்தில் அவன் திளைத்திருக்கவும் செய்கிறான்.

**988. अद्भुतचारित्रा அத்புதசாரித்ரா —** அதிசயிக்கத்தக்க வரலாறுகளை உடையவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அன்னை பராசக்தி பிரபஞ்சமாக இலங்குகின்றாள். பிரபஞ்சத்தின் அமைப்பும் அதில் நிகழ்ந்து வருகின்ற செயல்களும் யாண்டும் வியப்புக்குரியனவாம். உலகில் யுகந்தோறும் தோன்றும் சமுதாயங்களின் செயல்கள் ஆராய்ச்சிக்குரியனவாம். காலக்கிரமத்தில் விரிவடைந்து வருகின்ற கலைகள் அனைத்தும் இயற்கைத் தாயின் மகிமைக்கு விளக்கங்களாகின்றன. நலன், கேடு இரண்டும் நிறைந்தது பிரபஞ்சம். கேட்டைச் சமாளிப்பதும் நலனில் நிலைபெற்றிருப்பதும் இயற்கையின் திட்டமாகிறது. மனிதன் கருதுகிற பிரகாரம் நலனில் பற்று வைத்திருப்பவன் மானுடன் மட்டுமல்லன். எல்லா உயிர்களும் அன்னையிடத்திருந்தே வடிவெடுத்து வந்திருப்பதால் அந்தந்த உயிர் தனக்கு நலன் தருவதைக் காப்பதும் கேடு உண்டு பண்ணுவதைத் தவிர்ப்பதும் அதன் செயலாகிறது.

இயற்கையின் நடைமுறையைச் சரியாக ஆராய்தற்கேற்ப மனிதன் மேன்மையுறுகிறான். அன்னை பராசக்தி தர்மமே வடிவெடுத்தவள் எனப் போற்றப்படுகிறாள். அதற்குச் சான்றுகளை எல்லாப் படித்தரங்களிலும் உள்ள உயிர் வகைகளிடத்துக் காணலாம். இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஸ்தாவர உலகில் குறிஞ்சி என்னும் செடி ஒன்று கொடைக்கானல், நீலகிரி ஆகிய மலைப்பிரதேசங்களில் இருக்கிறது. பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒரு தடவை இது முளைத்து, வளர்ந்து, பூத்துத் தன் பெருமையை விளக்குகிறது. அதன் பிறகு ஒரே ஆண்டில் அது மறைந்துபட்டுப் போகிறது. அதன் விதைகள் மண்ணோடு மண்ணாகக் கலந்து கிடக்கின்றன. பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் அது முளைத்துத் தோற்றத்துக்கு வருகிறது. இயற்கையின் கண்ணுள்ள இவ்வதிசயம் வியப்புக்குரியதாம்.

மற்றோர் அதிசயம், நாகசர்ப்பம் அல்லது நல்லபாம்பு கொடிய விஷத்தை உடையது. அது தீண்டினால் மனிதன் தப்பிக்க முடியாது. அத்தகைய கொடிய ஜந்துவும் நலன், கேடுகளை அறிந்துகொள்ள வல்லதாயிருக்கிறது. அதைத் தாக்கச் செல்கின்றவனை அது எதிர்க்கிறது. ஆனால் சிறு குழந்தை ஒன்றோடு அது விளையாடுகிறது. குழந்தை அதைப் பிடிக்கப் போனால் அது பின்வாங்குகிறது. பிறகு கொஞ்சும் பாங்கில் குழந்தைக்குப் பக்கத்தில் அது வருகிறது. இயற்கையின் கண் அமைந்துள்ள இத்தகைய செயலும் வியப்புக்குரியதாம்.

நவீன பௌதிக விஞ்ஞானிகள் இயற்கையின் பாங்கையே ஆழ்ந்து ஆராய்ந்து வருகிறார்கள். அதன் மகிமைகளை அறிந்துகொள்ளுதற்கேற்ப அந்த விஞ்ஞானிகளுக்கு இயற்கையின் கண் பக்தி தானாகவே வடிவெடுக்கிறது. இங்ஙனம் இயற்கையில் எந்தப்பகுதியை ஆராய்ந்து பார்த்தாலும் அது வியப்புக்குரியதாகவே தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறது.

அறிவு சொரூபம் மட்டுமன்று; ஆனந்த மயமாகவும் இயற்கை இலங்குகின்றது. பரஸ்பரம் ஆனந்தத்தை ஊட்டும் உயிர்கள் ஒத்து வாழ்கின்றன. ஆனந்தத்துக்கு இடுக்கண் விளைவிப்பவைகளை எதிரிகளாகக் கருதி அவைகளைத் தாக்கவும் செய்கின்றன. எனவே, இயற்கைத் தாயை ஐம்பொறிகளுக்கும் எட்டுகிற தெய்வமாக வணங்குவது உசிதம்.

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

சூதர் சொன்னார்: "குந்தியினால் இங்ஙனம் பிரார்த்திக்கப்பட்ட, ஸ்தோத்தரிக்கப்பட்ட பகவான் புன்முறுவல் பூத்தார். அவள் சொன்னவை எல்லாம் உண்மை, பொருத்தமானவை. ஆனால் அந்தப் புன்னகையோ பகவானுடைய மாயை அன்றி வேறன்று. மந்திரவாதி மந்திரக்கோலை ஆட்டுவதன் மூலம், மந்திர உச்சாரணை மூலம் எங்ஙனம் வேடிக்கை பார்ப்பவர்களை மயக்குகிறானோ அங்ஙனம் பகவானின் புன்முறுவல் மோஹமடையச் செய்தது. குந்தியின் ஆழ்ந்த உண்மையான பிரார்த்தனைக்கு இணங்கிப் பகவான் ஹஸ்தினாபுரிக்குள் பிரவேசித்தார். அவர் அங்கு வந்து குந்திதேவி, உத்தரை, திரௌபதி மற்றும் பெண்பாலர்களிடம் பேசி சமாதானப் படுத்தி விடைபெற்றுத் துவாரகை செல்ல ஆயத்தமானார். ஆனால் யுதிஷ்டிரனோ பேரன்பினாலும் ஆழ்ந்த பக்தியினாலும் மாதவனுக்கு விடைகொடுக்கவில்லை. "மாதவா, இன்னும் சிறிதுகாலம் இங்கு எங்களுடன் இருந்துவிட்டுச் செல்லுங்கள்" என்று அவர் வேண்டினார். முனிவர்களே, பீஷ்மர் மிகப்பெரிய உத்தமரான கிருஷ்ணபக்தர். கடவுளின் அவதாரமாகிய ஸ்ரீகிருஷ்ணன் யுதிஷ்டிரனை முன்னிட்டுக்கொண்டு பீஷ்மரைப் பார்க்க விரும்பினார். யுதிஷ்டிரனும் கடந்த யுத்தத்தில் நடந்த பேர் அழிவு, உயிர்ச்சேதம், தன் உற்றார் பலரின் மரணம் இவைகளை முன்னிட்டு மிகவும் மனம் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தார். பீஷ்மரிடத்திலிருந்து யுதிஷ்டிரன் ஆறுதலும் தர்மோபதேசமும் பெறவேண்டும் எனக் கிருஷ்ணன் விரும்பினார். வேத வியாசரும் மற்றும் பல தவ சிரேஷ்டர்களும் யுதிஷ்டிரனுக்கு இதற்கு முன் நடந்த பல தர்மயுத்தங்கள் பற்றியும் சாஸ்திர மேற்கோள்கள் காட்டியும், கிருஷ்ணன் தானே சமாதானப்படுத்தியும் அவர் சமாதானமடையவில்லை. தன்னிலும் மிக்க இளையவர்களையும் தன் மகன்களையும் கொன்று குவித்து விட்டுத் தனக்கு எதற்கு ராஜபோகம், அரச பதவி? யுதிஷ்டிரனின் அன்பு உள்ளம் சமாதானமே அடையவில்லை. விவேகம், வைராக்கியமும், தர்மத்தில் உறுதியான பிடிப்பும் உள்ளவர் யுதிஷ்டிரன். தர்மயுத்தத்தில் இப்படிப்பட்ட பேர் அழிவு எதிர்பார்த்ததுதானென்றாலும் பற்றற்ற அவர் மனதும் அறியாமை என்கிற மாயையால் மூடப்பட்டதாகத் துக்கித்துக் கொண்டே இருந்தது. துக்கம் தொண்டையை அடைக்கக் கண்ணீர் மல்க அவர் இங்ஙனம் கதறி அழுதார்: "அந்தோ, நான் மிகப்பெரிய மூடன். நான் எத்தகைய கெட்ட மனது வாய்த்தவனாக இருக்கிறேன். பதினெட்டு அக்ஷௌஹிணி சேனையைக் கொன்று குவிக்க நேரும் என்பதை நான் நினைத்துப்பார்க்கவில்லையே! (ஓர் இரதம், ஒரு யானை, ஐந்து காலாட்படை வீரர், மூன்று குதிரை வீரர் சேர்ந்து ஒரு பட்டி ஆகிறது. மூன்று பட்டி சேர்ந்து ஒரு சேனாமுகம் என்றும், மூன்று சேனாமுகம் சேர்ந்து ஒரு குல்மா என்றும், மூன்று குல்மாக்கள் கொண்டது ஒரு கணம் என்றும், மூன்று கணங்கள் கொண்டது ஒரு வாஹினி என்றும், மூன்று வாஹினி சேர்ந்தது ஒரு பிரிதானா என்றும், மூன்று பிரிதானங்கள் சேர்ந்தது ஒரு சாமு என்றும், மூன்று சாமுகள் கொண்டது ஒரு அனீகினி என்றும், பத்து அனீகினிகள் சேர்ந்து ஒரு அக்ஷௌஹிணி என்றும் சொல்லப்படுகின்றன.) நரியும் நாயும் கழுகும் பிய்த்துத் தின்னும் இந்த மாமிசப் பிண்டத்துக்காக எவ்வளவு கோரமான பலி, ரத்தவெள்ளம் ஏற்படுத்தியுள்ளேன். அந்தோ, எவ்வளவு வெட்ககரமான செயலைச் செய்துள்ளேன்! இளம் பையன்கள், பிராம்மணர்கள், உறவினர்கள், நண்பர்கள், ஆச்சாரியர்கள் ஆகியவர்கள் எல்லாரும் மரணமடையக் காரணமானேன். பத்தாயிரம் ஆண்டுகள் நரகத்தில் வேதனைப்பட்டாலும் இந்தப் பாபம் தீராது. தன் குடிமக்களைக் காப்பாற்றுதல் பொருட்டு அரசன் ஒருவன் தர்மயுத்தம் செய்யும் போது ஏற்படும் உயிர்ச்சேதம், பொருட்சேதம் ஆகிய பாபங்களுக்கு ஆளாக மாட்டான் என்று சாஸ்திரம் சொன்னாலும் என் மனம் பொறுக்கவில்லை. ஓர் அரசன் தன் மக்களைக் கொடுமைப்படுத்தினால் அந்த அரசனைக் கொல்லலாம் என்றும் சாஸ்திரம்

விதித்துள்ளது. ஆனால் துரியோதனனே தன் குடிமக்களைத் தன் குழந்தைகள் போன்று பேணி வந்தான் என்பது பிரசித்தமானது. இவ்விஷயத்தில் அவனிடம் ஒரு குறையும் காணமுடியாது. அத்தகைய நல்ல அரசனைப் பேராசையினால் கொன்றுவிட்டேன். தம் மகன்களை இழந்த தாய்மார்கள், கணவர்களை இழந்த மனைவிமார்கள், நல்ல நண்பர்களையும் உறவினர்களையும் இழந்து பரிதவிப்பவர் ஆயிரக்கணக்கானோர் ஆகிய இவர்களின் துயரங்களுக்கெல்லாம் நானே பொறுப்பாளி. எந்தப் பிராயச்சித்தம், எந்தக் கிரியைகள் அனுஷ்டானம் செய்தும் இந்தப் பாபத்தைத் தீர்க்கமுடியாது. சேற்றைக்கொண்டு சேற்றைக் கழுவ முடியாததுபோல, மதுவினால் கெட்டுப்போன வஸ்துவை மறுபடியும் நல்லது ஆக்க முடியாததுபோல நான் செய்துள்ள இந்தப் பெரிய உயிர்ப்பலித் துன்பத்துக்கு எந்தப் பிராயச்சித்தமும் போதாது, எதைக் கொண்டும் அதைச் சரிபண்ண முடியாது.''

அத்தியாயம் 9

சூதர் சொன்னார்: இங்ஙனம் தன்னை முன்விட்டுப் பெரிய அழிவு நேரிட்டதைக் குறித்து மிகவும் வருந்திய யுதிஷ்டிரன் பல்வேறு தர்மங்களைப் பற்றியும் அறநெறி, நீதிநெறிகளைப் பற்றியும் கேட்டறிவதற்காகக் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் அம்புப்படுக்கையில் படுத்திருந்த பீஷ்மரைப் பார்க்கச் சென்றார். அவரைப் பின்பற்றி அவர் சகோதரர்களும், தௌம்யர், வியாசர் ஆகிய முனிசிரேஷ்டர்களும் போனார்கள். நல்ல குதிரைகள் பூட்டிய தங்கரதம் ஒன்றில் யுதிஷ்டிரர் அழைத்துச் செல்லப்பட்டார். ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ஜுனனும் மற்றொரு ரதத்தில் அவரைப் பின்பற்றிச் சென்றனர். குருக்ஷேத்திரம் வந்தடைந்து தேவலோகத்திலிருந்து விழ்ந்து பூலோகத்தில் படுத்துக்கிடக்கிற தேவன் போன்று மிளிர்ந்த பிதாமகரை யாவரும் வீழ்ந்து வணங்கினார்கள்.

அப்பொழுது கங்கையின் புத்திரராகிய பீஷ்மரைப் பார்ப்பதற்காகப் பிரம்ம ரிஷிகளும் தேவ ரிஷிகளும், ராஜ ரிஷிகளும் வந்து கூடினார்கள். ஓ பிராம்மணர்களே, அந்தச் சான்றோர் கூட்டத்தைக் காண்பதே பெரிய பாக்கியம். கடவுளின் விபூதிகள் மகிமைகள் யாவும் அங்கு ஒன்று கூடியது போன்று அக்காட்சி இருந்தது. பீஷ்மர்காலத்துக்கு ஏற்றதர்மத்தையும் கடமைகளையும் நன்கு அறிந்தவர். அடக்கமே வடிவெடுத்த பீஷ்மர் அங்குத் திரண்டிருக்கும் முனிவர்கள் யாவரையும் வணங்கினார். அவருக்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் மகிமை நன்கு தெரியும். அவரது ஹிருதயத்தில் பகவான் திவ்ய வடிவத்தில் ஒளிர்ந்து கொண்டிருந்தார். அந்த மாயக் கிருஷ்ணன் இப்போது மானுட வடிவில் நேர் பிரத்யக்ஷமாகியுள்ளார். அவரையும் பீஷ்மர் வழிபட்டார். பிதாமகரை இத்தகைய நிலையில் பார்த்த பாண்டவர்கள் நெஞ்சு பேர் அன்பினாலும் மரியாதையினாலும் உருகியது. கண்ணீர் மல்கத் தலை கவிழ்ந்து பாட்டனார் முன் வீற்றிருந்தார்கள். சீலமே வடிவெடுத்து, துயரத்திலும் தர்மத்தையே கடைப்பிடித்த தமது அன்பிற்குரிய பேரர்கள் இங்ஙனம் தம் அருகே மிக்க சோகத்துடன் வீற்றிருப்பதைப் பார்த்துப் பீஷ்மரும் துயரத்தினாலும் அன்பினாலும் கண்ணீர் சிந்தினார். கண்ணீர் அவர் பார்வையை மறைத்தது. மிகவும் விசனத்துடன் அவர் பகர்வாராயினர்: ''ஆ, என்னே தீமையின் வினைத் திறன்! என் அன்பிற்குரிய பாண்டவர்களே, நீங்கள் பகவான் நாராயணனிடத்தும், பக்தர்களிடத்தும், தர்மத்திடத்தும் மிகவும் பக்தி உள்ளவர்கள். பின்பு நீங்கள் ஏன் இவ்வுலகம் துன்பம் நிறைந்தது; ஆகவே இவ்வுலகில் இனி வாழ விரும்பவில்லை என்று கூறுகிறீர்கள்? உங்கள் தந்தையார் பாண்டு மஹாராஜன் இறந்தபோது நீங்கள் எல்லாரும் பாலர்களாக இருந்தீர்கள். அதனால் உங்கள் தாய் குந்தி உங்கள் பொருட்டு ஏராளமான துன்பங்களை அனுபவித்தாள். நீங்கள் முற்றும் கள்ளங்கபடமற்றவர்கள், நேர்மையாளர்கள். ஆயினும் நீங்கள் நெடிது அதிகத் துன்பத்துக்கு ஆளானீர்கள். செயல் மிக்கதும் வேகம் நிறைந்ததுமான கால வெள்ளம் உங்களுக்கு இத்தகைய துன்பங்களைக் கொண்டுவந்தது. காலமே இப்பிரபஞ்சத்தை இயக்கிக்கொண்டிருக்கிறது. காற்று மேகங்களை இழுத்துச் செல்வது போன்று கால வெள்ளம் ஜீவர்களை உருட்டிச்

செல்கிறது. யாராலும் இதைத் தடுத்துநிறுத்த முடியாது. காலம் பல அதிசயங்களை எல்லாம் செய்ய வல்லது! தர்ம தேவதையின் புத்திரனாகிய யுதிஷ்டிரன் தங்களுக்கு அண்ணனாய், அரசனாய், தலைவனாய், தெய்வமாய் இருந்தும், எல்லையற்ற புஜபல பராக்கிரமம் வாய்ந்த பீமன் இருந்தும், ஒப்பற்ற வில்வீரன் விஜயன் இருந்தும், பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே உங்களைத் தோன்றாத் துணையாய் இருந்து சதா ரக்ஷித்து வந்தும் நீங்கள் இடைவிடாது துன்பத்துக்கு மேல் துன்பம் அனுபவிக்க நேர்ந்ததே!

ஓ யுதிஷ்டிரா, பகவான் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சங்கல்பத்தை, இச்சையை யாரே அறிய வல்லார்? பரத வம்சத்தில் தலைசிறந்தவனே, காலம் அனைவரையும் ஆட்டிப் படைக்கிறது என்பதை நன்கு நீ அறிந்துள்ளாய். அக்காலம் உனக்கு உண்டுபண்ணிய சூழ்நிலைக்கு ஏற்ப நீயும் நடந்துகொள். உன் அரச கடமையை மேற்கொண்டு உன் பிரஜைகளை நீ உன் மக்களைப் போன்று நன்கு பாதுகாப்பாயாக. ஸ்ரீகிருஷ்ணன் இவ்வுயிர்களுக்கெல்லாம் மூலம். ஆதிபுருஷன், ஆதிநாராயணன், ஆதிகாரணன் ஆயினும் தம் மாயையால் யதுகுலத்தில் தோன்றி உனக்கும் எனக்கும் மற்றும் பலருக்கும் இளையவன் போன்று காணப்படுகிறார். மக்கள் அறியாமையினால் அவரைத் தேவகியின் மகன் என்றும், உங்களிடம் அன்புடன் நடந்துகொள்ளும் உறவினன் என்றும் கருதி வருகிறார்கள். ஆனால் சர்வ வல்லமை வாய்ந்த சாஸ்வதப் பொருள், சத்பொருள் அவரே. என்றுமுள்ளவர் அவரே. அவரே பரமபிரபு. அவரையே என்றும் பின்பற்று. அவர் சக்தி அறிய முடியாதது. சிவபிரான், நாரதர், கபிலர் போன்றவர்களே அவரை அறியவல்லவர் ஆவர். குழந்தாய்! அவரை உன் தாய்மாமன் மகன் என்றும், உனக்கு நண்பன், பார்த்தசாரதி, நம் மேல் அன்புடைய உறவினன், வருபொருள் உரைக்கும் நல்ல மந்திரி என்றும் கருதிவிடாதே. அவரே இந்த ஜகத்தின் பிதா. நீ அவரை என்றும் கதியெனப் பற்றிக்கொள். அவர் ஆணைப்படியே நடந்துகொள். அவர் உனக்குச் சாரதியாய் இருந்ததை முன்னிட்டும் மூத்தவன் என்கிற முறையில் உனக்கு மரியாதை செய்வதை முன்னிட்டும் அவரை எளிமையாகக் கருதிவிடாதே. அவர் சர்வக்ஞர். சமதிருஷ்டி உடையவர். அவருக்கு விருப்பு, வெறுப்பு கிடையாது. பாரபக்ஷம், தற்பெருமை ஆகிய ஏதும் கிடையாது. ஒரு கர்மம் ஒழுங்காக, முறையாக நிறைவேற்றப்பட்டதா இல்லையா என்பதை வைத்துப் பகவான் அக்கர்மத்தின் பலனை, நலனை, உயர்வைப் பார்ப்பதில்லை, கணக்கிடுவதில்லை. (கணக்குகள் சரியாக இருக்கும்; ஆனால் பணம் கையாடல் நடந்திருக்கலாம். சாட்சி, சூழ்நிலை, விசாரணை மூலம் தவறை நிரூபிக்கமுடியாமல் போகலாம். ஆனால் தவறு நடந்திருக்கலாம். இன்றைய நீதி விசாரணையில் எவ்வளவு தவறுகள் நடந்துவிடுகின்றன. எவ்வளவு தணிக்கைகளைத் தப்பிப் பணத்தைப் பொது இடங்களில் கையாண்டுவிடுகிறார்கள். ஆகவே இதைவைத்து நீதியும், சுத்தமும் நிர்ணயிக்கப் படா. தெய்வ நீதி நேர் மனதைப் பார்க்கிறது.) கடவுளுக்கு எல்லாரும் சமம். அவருக்குப் பாரபக்ஷமே கிடையாது. ஆனால் தம் பக்தர்களிடத்து மட்டும் அவர் அதிகம் சார்பு, அபிமானம் உடையவராக இருக்கிறார் எனலாம். மரணம் என்னை நெருங்கிக்கொண்டிருப்பதை அறிந்து பகவான், என் பிரபு எனக்குக் காட்சிதர இதோ எழுந்தருளியுள்ளார்.

முனிவர்கள் இறைவன் நாமத்தைச் சதா பஜித்தும், ஸ்மரணை செய்தும் தியானித்தும் வருகிறார்கள். இத்தகைய ஆத்மசாதனங்கள் மூலமாக அவர்கள் இறக்கும்போதும் மனது எப்போதும் கடவுள் சிந்தனையில் இருப்பதால் கர்மபந்தங்களையும், முக்கர்மங்களையும் (சஞ்சித-ஆகாமிய-பிராரப்த-கர்மங்கள்) தாண்டிவிடுகிறார்கள்; மரணமிலாப் பெருநிலை எய்துகின்றார்கள். பகவானே, என் பிரபோ, இவ்வுடல் வாழ்வு முடிவுறும்வரை என் ஸ்தூலக் கண்ணுக்குக் காட்சி கொடுத்துக்கொண்டே இருக்கவேண்டுமென்று தேவரீரை மனப்பூர்வமாகப் பிரார்த்திக்கிறேன். முனிவர்கள் தியானித்து இறைவனைத் தங்கள் ஹ்ருதய கமலத்தில் எழுந்தருளப் பண்ணுகிறார்கள். நானோ கமலமுகமும், கருணை விழிகளும் மோஹனப் புன்னகையும் கூடிய தேவரீரின் திருமுகத்தைப் பார்த்துக்கொண்டே மரணமடைய விரும்பு

கிறேன்'' என்று பிதாமகர் பிரார்த்தித்தார்.

சூதர் சொன்னார்: முனிவர்களே, பாட்டனரின் இந்த இனிமையான வார்த்தைகளில் அளவற்ற மகிழ்ச்சியும் திருப்தியும் அடைந்த யுதிஷ்டிரன் பிதாமகரிடம் சமயசம்பந்தமாகவும், உலக நீதி, அறநெறி, அரசியல் சம்பந்தமாகவும் பல விஷயங்களைக் கேட்டறிந்துகொண்டார். அறிவுப் பொக்கிஷமாகிய கங்கா புத்திரரும் பேரன் கேள்விகளுக்கு ஏற்ற கதைகள், பெரியோர் களின் வாழ்க்கைச் சம்பவங்கள் ஆகிய உபமானங்களோடு தக்க விடைகளைச் சொன்னார். இந்தச் சம்வாதத்தில் தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்னும் புருஷார்த்தங்களும், மெய்ச் சமயம், பொய்ச்சமயத்தின் விஷயங்கள், தானத்தின் சிறப்பு, ராஜ தர்மம், பிராயச்சித்த முறைகள், மாதர் தர்மம், விரதானுஷ்டானங்கள் ஆகிய லோக தர்மங்களும் அடங்கியிருந்தன. மக்களின் பண்பாடு, தன்மை, அதிகாரி பேதத்துக்கு ஏற்ற சமய அனுஷ்டானங்கள் ஆகியன பற்றியும் பீஷ்மர் சொன்னார். பீஷ்மர் சிறந்த யோகி, இச்சாமிருத்யு வரம் பெற்றவர். அவர் உத்தராயனப் புண்ணிய காலத்தில் தம் சரீரத்தை உகுக்கப் பெரிதும் விரும்பினர். அதற்காகவே யுத்தத்தில் பத்தாம் நாள் விழ்ந்தவர் நீண்ட காலம் அம்புப் படுக்கையில் கிடந்தார். யுதிஷ்டிரனோடு இங்ஙனம் சத்விஷயங்களைப் பேசிக் கொண்டு வரும்போது உத்தராயணப் புண்ணிய காலமும் வந்தது. அப்பொழுது பேச்சை நிறுத்தி, உலகப் பொருள்களிலிருந்து இந்திரியங்களை மீட்டு, முழுமனதையும் சதுர்புஜங்களுடன் பீதாம்பரதாரியாகவும் உள்ள இறைவன், பரம்பொருள், ஸ்ரீ கிருஷ்ணன் பேரில் திருப்பி அவரைத் தியானித்தார். அவர் கண்களை மூடவில்லை. சர்வ பரிபூரணமாக அவர் மனது தம் பகவான் பிரபுவின்பேரில் ஒன்றுபட்டிருந்ததால் அவர் ஜீவ உபாதிகள் யாவும் விலகின. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் அருள் பார்வையினல் அம்புப் படுக்கையின் வேதனையும், ரணங்களின் வேதனையும் முதுமையின் தளர்ச்சியும் போய்விட்டன. இவைகளுடன் சேர்ந்து இந்திரியங்களின் செயல்களும் ஒடுங்கி விட்டன. இந்தச் சரீரத்தைக் கழற்றி எறியும் முன் அதன் முதற் படியாக அவர் தம் இறைவனையே தோத்திரம் பண்ணினர், பிரார்த்தித்தார்.

பீஷ்மர் சொன்னார்: பக்தர்களிடத்தில் கருணையே வடிவெடுத்தவராகக் காட்சி தருபவர் பகவான் ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா. என் பிரபுவின் திருவடிகளில் உலகப் பற்றற்ற என் மனதைச் சமர்ப்பிக்கின்றேன். பகவானை என் மனது இடைவெளியின்றி நாடுகிறது. இவர் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் தனிப் பரம்பொருள், விநாயகன், தன்னில்தானே திருப்தியுற்று இருக்கிற ஆனந்தமானபரம், சுகவாரி; அத்தகைய மெய்ப்பொருள் எப்பொழுதோ ஒரு சமயம் பிரகிருதியோடு இந்த ஆனந்தநிலையில் சேர்ந்து விளையாடுகிறது. அப்பொழுது சிருஷ்டியாகிய முத்தொழில்கள் தோன்றுகின்றன. அப்பழம்பொருள் காண்டீவம் என்ற தெய்வாம்சம் பொருந்திய வில்லை உடையவனகிய அர்ஜுனனின் தோழர். அவருடைய தமால மரம்போன்ற பச்சைநிறமானது மூன்று உலகத்தார்களையும் கவர்ந்து இழுக்கிறது. அவர் சரீர நிறத்துக்கேற்ற சூரியகாந்தியுடன் கூடிய தூய பீதாம்பர உடை, வாக்கினல் விளக்கமுடியாத அழகுடன் விளங்குகிறது. அவர் தாமரை போன்ற முகம், அதில் அழகழகாகத் தொங்கும் அவர் கேசம் அவர் முகத்தை ஆ! எவ்வளவு இனிய முகமாக்கியிருக்கிறது! என் வாழ்வில் என் மனதைப் பூரணமாகக் கண்ணனுக்கு உரியதாக்கிவிடவேண்டும்; அவரையே நாடியிருக்கவேண்டும் என்கிற ஒரு விருப்பத்தைத் தவிர வேறு விருப்பம் எதுவுமே இல்லை. யுத்தகளத்தில் குதிரைகளினல் கிளப்பிவிடப்பட்ட செம்மண் புழுதியினல் என் பகவானுடைய அடர்ந்து வளைந்த கருநிறக்கேசம் பழுப்பு நிறம் அடைந்துவிட்டது. குதிரைகளை அடக்கிச் சாரத்தியம்பண்ணுவதால் அவருடையதாமரை மலர்போன்ற முகத்தில் அரும்புகின்ற வேர்வைத்துளிகள் அத்திருமுகத்தை மேலும் சோபிக்க வைக்கின்றன. என் கூர்மையான அம்புகள் அவருடைய திவ்வியமான கவசத்தைத் துளைத்தபோது அக்கவசங்கள் ஒளிவீசி, பார்ப்பதற்கு அரிய இனிய காட்சியாய் இருந்தது. என் பிரபுவை நான் வேண்டுவது ஒன்றே ஒன்றுதான்: தம் திருவடிகளிடத்து என்றென்றும்மாருத பக்தியைக் கொடுக்கவேண்டும்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (365)** இறைவனுடைய ஆணைப் படியே பிரபஞ்சத்தில் அனைத்தும் நிகழ்கின் றன. அவனுடைய ஆணையை மீறி ஓர் அணு வும் அசையாது என்பது ஒரு கோட்பாடு. மனி தன் தான் விரும்பியதையெல்லாம் செய்து சாதிப்பதும் அடையப்பெறுவதும் சாத்தியம் என்பது மற்றொரு கோட்பாடு. முரண்படுகிற இவ்விரண்டு கோட்பாடுகளுள் எது உண்மை?

பிரபஞ்சத்தின் அமைப்பையும் மனிதன் படைத்துள்ள இச்சா சுதந்திரத்தையும் சரி யாக அறிந்துகொள்ளாதவனுக்கு முரண்பாடு உண்டு. மற்று இவை இரண்டையும் சரியாக அறிந்துகொள்கிறவனுக்கு இவைகளுக்கிடை யில் முரண்பாடுகள் இல்லை.

நடைமுறையிலுள்ள அரசாங்கம் ஒன்றுக்கு அது வகுத்துவைத்துள்ள சட்டதிட்டங்கள் பல உள. அந்த அரசாங்கத்தில் வாழ்ந்திருப் பவன் அரசாங்க சட்டதிட்டத்துக்கு உட்படத் தான் விரும்பியதையெல்லாம் சாதிக்கலாம். சட்டத்தை மீறி எதையும் சாதிக்க அவனுக்கு இயலாது. கிருஷிகன் ஒருவன் மைதானத்தில் பசு ஒன்றை மேய்ப்பதற்கு முளை அடித்து அதில் பசுவைக் கயிறுகொண்டு கட்டிவைக்கிறான். அந்தக் கயிற்றின் நீளத்துக்கு உட்பட்ட எந்த இடத்தில் போய்வேண்டுமானாலும் பசு மேய லாம். கயிற்றின் நீளத்தைக் கடந்து தூரப் போய் மேய்தற்கு அந்தப் பசுவுக்கு இச்சா சுதந்திரம் இல்லை. அதே விதத்தில் கடவுள் அந்தந்த ஜீவனுடைய பரிபாகத்துக்கேற்ற வாறு இச்சா சுதந்திரம் எனும் கயிற்றைக் கொடுத்திருக்கிறார். இந்த அடிப்படைக்கோட் பாடுகளை நாம் நன்கு ஓர்ந்து ஆராய்ந்து கருத் தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

**கேள்வி: (366)** கர்மத்தில் ஞானம் இருக் கிறது; ஞானத்தில் கர்மம் இருக்கிறது. விளக் கம் என்ன?

ஐரோப்பாவிலிருந்த ஆதிமனிதர்களுக்கு சமைப்பதைப் பற்றிய ஞானம் இல்லை. அவர் கள் பச்சை மாமிசத்தைப் புசித்து வந்தார்கள். ஒருதடவை அவர்கள் வளர்த்து வந்த பன்றி களிருந்த குடிசை தீப்பற்றிக்கொண்டது. அதில் தீய்ந்துபோய்ப் பன்றி ஒன்று மாண்டு போயிற்று. தீய்ந்துபோன மாமிசத்தைப் புசித் துப் பார்த்தார்கள். அதில் சுவை அதிகம் இருந்ததைக் கண்டார்கள். அந்த ஞானம் அவர்கள் கையாண்ட கர்மத்தின் விளைவாம். எப்பொழுதெல்லாம் சுவையான பன்றி மாமி சத்தைப் புசிக்க விரும்பினார்களோ அப்பொழு தெல்லாம் பன்றிகள் இருந்த குடிசைக்குத் தீ வைத்தார்கள். நாளடைவில் குடிசைகளுக் குத் தீ வைக்காமல் பன்றியைக் கொன்று தீயில் சுடலாம் என்ற ஞானம் அவர்களுக்கு வந்தது. இச்செயலில் கர்மத்தின் விளைவாக ஞானமும் பிறகு ஞானத்தைப் பயன்படுத்திக் கர்மத்தை முறையாகச் செய்யவும் அவர்கள் கற்றுக்கொண்டார்கள். இக்கேள்விக்கு விடை இந்நிகழ்ச்சியில் இருக்கிறது.

தத்துவபூர்வமாகப் பார்க்குமிடத்துப் பிர பஞ்ச வாழ்வு கர்மமயமானது. அந்தக் கர்மத் தைச் செய்துகொண்டு போகப்போக அதி னின்று வருகின்ற அனுபவம் ஞானமாக வடி வெடுக்கிறது. பிறகு அந்த ஞானத்தைக் கையாண்டு வினையின் விளைவை மேன்மைப் படுத்தலாம்.

பௌதிக விஞ்ஞானிகள் கர்மத்தின் வாயி லாக இயற்கையில் அமைந்துள்ள மேலான கோட்பாடுகளை அறியவந்தார்கள். மேலான கோட்பாடு என்னும் ஞானத்தைப் பயன்படுத் திக் கர்மத்தை நன்கு சாதிக்கும் திறமை இப் போது உலகத்தவர்களுக்கிடையில் இருக் கிறது.

பிரபஞ்ச வாழ்வு கர்ம சொரூபமானது. எவ்வளவு காலம் வாழ்ந்திருந்தாலும் கர்மத் தில் உள்ள கேட்டை அகற்றி நலத்தை மட்டும் பெறமுடியாது என்னும் ஞானம் பேரறிஞர்களுக்கு வந்தது. பிரபஞ்சத்துக்கு அப்பால் உள்ள நிலையில் நலமும் இல்லை; கேடும் இல்லை. பேரானந்தமே எஞ்சியிருக் கிறது என்னும் முடிவுக்கு நிறைஞானிகள் வந்தார்கள். இங்ஙனம் கர்மத்தின் வாயிலா கப் பிரபஞ்சத்தின் பாங்கை அறிந்துகொள் ளும் ஞானம் அவர்களுக்கு வந்தது. அந்த ஞானத்தைப் பயன்படுத்திக் கர்மாதீதத்துக் குப் போவதற்கான முறையை அவர்கள் கண்

டறிந்தார்கள். இதுவே முடிந்தநிலையில் கர்மத்தின் விளைவாக ஏற்படும் ஞானத்தைக் கொண்டு கர்மத்தை நன்கு ஆற்றவோ கர்மாதீதத்துக்குப் போகவோ மனிதனுக்குச் சாத்தியம் என்னும் பேரறிவை ஞானிகள் பெறலாயினர்.

**கேள்வி: (367) தர்ம சக்கரத்தில் 358ஆவது கேள்விக்கான பதிலில் உள்ளபடி இராமன், கிருஷ்ணன், புத்தன் ஆகிய மூர்த்திகளே சரித்திர ஆதாரம் உள்ள அவதாரங்கள் என்றால் சங்கரர் குமாரிலபட்டரைக்கொண்டு புத்த மதத்தை நாட்டைவிட்டு விரட்டியது ஏன்?**

புத்தமதம் நாட்டினின்று விரட்டப்படவில்லை. புத்தமதத்தில் ஒரு சிறு பகுதியினர் நாஸ்திகர்களாக வடிவெடுத்தார்கள். அதன் விளைவாகப் பௌத்த மதமும் நாஸ்திகமும் ஒன்றேடொன்று இணைக்கப்பட்ட பாங்கில் மக்கள் அறிந்துகொண்டார்கள். ஆதலால் அந்தப் பெயர் நீக்கப்பட்டதே ஒழிய புத்த மதத்தினின்று வடிவெடுத்த மேலான கோட்பாடுகளெல்லாம் ஹிந்து மதத்தில் நன்கு காப்பாற்றி வைக்கப்பட்டு வருகின்றன. சான்றுகள் சில எடுத்துக்கொள்வோம். வேத ஆகம விதிகளும் வழிபாடுகளும் என்று நாம் சர்வசாதாரணமாகச் சொல்லி வருகிறோம். வேதத்தில் அமைந்திருந்த பகுதிகளெல்லாம் வேதவிதிகளாக அமைந்திருக்கின்றன. இன்று சைவ ஆகமம், வைஷ்ணவ ஆகமம், சாக்த ஆகமம் இப்படியெல்லாம் பெயர் பெற்றிருக்கின்ற பகுதிகளனைத்தும் புத்த மதத்தில் வடிவெடுத்தவைகளாம். அவைகளுடைய தலைப்பை மட்டும் மாற்றி ஆகமங்கள் என்று இன்றைக்கு நாட்டில் நாம் வழங்கி வருகின்றோம். பௌத்தர்கள் இலங்கையில் பௌத்தக் கோயில்களில் கையாளுகிற முறைகளையும் திபேத்தில் அவர்கள் கையாளுகிற முறைகளையும் ஆராய்ந்து பார்த்தால் பௌத்த மதம் வேறு, ஆகம விதிகள் வேறு என்கின்ற முடிவுக்கு நாம் வரமாட்டோம். இரண்டும் ஒன்றே என்கின்ற முடிவுக்கு நாம் வருகிறோம். எனவே சங்கரர் புத்த மதத்தில் இருக்கும் மேலான கோட்பாடுகளுக்கெல்லாம் ஆகமம் என்கின்ற பெயர் கொடுத்து ஹிந்து மதத்தில் சேர்த்துக்கொண்டார். சிலர் அவரைப் பிரசன்ன பௌத்தர் என்பர். அவர் விரட்டியோட்டியது பௌத்தமதம் எனும் பெயரில் இருந்துவந்த நாஸ்திக வாதம், சூன்ய வாதம் ஆகியவைகளை மட்டுமேயாம்.

**கேள்வி: (368) சூதும் வாதும் வேதனை செய்யும் என அறிந்தும் தர்மர் சூதாட்டத்தில் ஈடுபட்டது கௌரவர்களின் சூழ்ச்சியை அறியாமலா? உலக ஆசையினலா?**

சூதும் வாதும் வேதனை செய்யும் என்னும் கோட்பாட்டைப் பாண்டவர்களுள் மூத்தவனாகிய யுதிஷ்டிரன் நன்கு அறிந்திருந்தான். அது பொல்லாதது என்பதை அதில் ஈடுபட்டதன் விளைவாக அவன் நன்கு அறிந்திருந்தான். ஆயினும் பாண்டவர்கள் தங்களுக்காக என்று தாங்களே முயற்சி பண்ணித் தேடிக்கொண்ட இந்திரப்பிரஸ்தம் எனும் நகரத்தையும் அதில் அமைந்திருந்தஅழகிய அற்புதமான சபா மண்டபத்தையும் கைப்பற்றக் கௌரவர்கள் தீர்மானித்தார்கள். அதற்கேற்ற சூழ்ச்சியை அவர்கள் கையாண்டார்கள். தர்ம புத்திரனாகிய யுதிஷ்டிரனைக் கௌரவ சகோதரர்கள் தங்களின் தந்தையாகிய திருதராஷ்டிரன் வாயிலாக அஸ்தினபுரத்துக்கு அழைத்தார்கள். பெரியப்பாவாகிய திருதராஷ்டிரனுடைய ஆணையை யுதிஷ்டிரன் ஒரு பொழுதும் மீறி நடக்கமாட்டான். அஸ்தினபுரத்துக்கு அழைத்த பிறகு பொழுது போக்குக்காகச் சூதாடும்படி சகுனியும் துரியோதனனும் யுதிஷ்டிரனிடம் வேண்டினார்கள். அவர்களுடைய வேண்டுதலைப் புறக்கணிக்க யுதிஷ்டிரனல் முடியவில்லை. சூதாட்டம் பொல்லாதது என்று சொல்லிக்கொண்டே அவன் அதில் ஈடுபட்டான். அதன் விளைவு விளையாட்டாகச் செய்தது வினையாக வந்து முடிந்தது. அவ்வினையையும் அவன் அமைதியாக ஏற்றுக்கொண்டது அவனுடைய பண்பாட்டிற்கு அறிகுறியாகும். உயிர்வகைகளுக்கிடையில் விவேகம் படைத்தவர்கள் யாரும் சூதாட்டத்திற்குப் பக்கத்தில் போகலாகாது என்னும் பெரிய பாடத்தை யுதிஷ்டிரன் நன்கு புகட்டியிருக்கின்றான். பெரியப்பாவின் சொற்படி தர்மன் நடந்துகொண்டான். அதன் விளைவாகவந்த வனவாச வாழ்க்கையை அவன் அமைதியோடு ஏற்றுக்கொண்டான். தீவினையில் இறங்கலாகாது என்ற பாடத்தைத் தர்மன் வாழ்க்கையில் இருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

# விவேகானந்தரின் சிந்தனைகள்

*( திருச்சி வானொலி நிலையத்தில் 24—1—83 அன்று ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் நிகழ்த்திய உரை )*

**பாமர மக்கள்**

கல்வி அறிவில்லாது வறுமையில் உழன்று கொண்டிருக்கின்ற மக்கள் பாமர மக்களாகின்றனர். அவர்கள் தாமாகச் சிந்திக்கின்ற ஆற்றல் உடையவர்கள் அல்லர். பிறர் ஏவுதலுக்கு உட்பட்டுச் செயல்புரிபவர்களாவார்கள். அவர்களுடைய அறிவுக்கண்ணைத் திறந்து அவர்களுடைய நிலையை உயர்த்துவது அவர்களுக்கு நாம் செய்கின்ற தொண்டு ஆகும். அப் பாமரமக்களின் உழைப்பை நாம் பயன்படுத்துகின்றோம். அவர்களுடைய நலத்தைப் பற்றி நாம் சிந்திக்காவிட்டால் நாம் கற்றுள்ள கல்வியினால் யாது பயன்?

கல்வி கற்றவனைப் பார்த்துச் சுவாமி விவேகானந்தர் கேட்பதாவது: "பாமரர்களுடைய ரத்தத்தை உறிஞ்சிக் கல்விகற்றுச் சுகபோகத்திலிருக்கும் நீ அவர்களின் நலனைப்பற்றிச் சிந்திக்காமலும், அவர்களுக்காக நீ செயல்படாமலும் இருப்பாயாகில் நான் உன்னைத் துரோகி என்றுதான் கூறுவேன்."

"நாடு முன்னேற வேண்டுமென்றால் பாமரர்களுடைய நிலை உயரவேண்டும். பாமர மக்களின் உழைப்பினால்தான் தனவான்களும், புரோகிதர்களும், அரசர்களும் உயர்வு அடைந்தார்கள். ஆனால் அவர்கள் பாமர மக்களின் நிலையைப் பற்றி நினைக்காதவர்களாக இருக்கிறார்கள். இந்தியாவிலுள்ள கேடுகளுக்கு எல்லாம் பாமரமக்களின் இழிநிலையே காரணமாகும். அந்நியர்களுடைய ஆட்சியும், புரோகிதர்களுடைய ஆதிக்கமும் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நம் நாட்டுப் பாமரமக்களை நசுக்கி வந்திருக்கின்றன. அதன் விளைவாகப் பாமரமக்கள் தாங்கள் மனிதர்கள் என்பதையே மறந்துவிட்டார்கள். ஆணவமும் அதிகாரமும் கொண்டிருந்த ஒரு சிறுபான்மையரிடையே கல்வியும் அறிவு ஆற்றலும் அடங்கிக்கிடந்ததுதான் இந்தியாவின் வீழ்ச்சிக்குப் பிரதான காரணமாகும். பாமரமக்களுக்குக் கைகொடுக்க நண்பர்கள் இல்லை. அவர்கள் எவ்வளவு முயன்றாலும் முன்னேற முடியாதவர்களாக இருக்கின்றார்கள். மேன்மக்கள் இழைக்கும் கொடுமைகளை அவர்கள் அறியாதவர்களாக இருக்கிறார்கள். அடிமை வேலை செய்வதற்கே தாங்கள் பிறந்திருப்பதாக அவர்கள் எண்ணி வருகின்றனர். ஒவ்வொருவரும் பிரம்ம சொரூபம் என்று உணரவேண்டுமென வேதாந்தம் புகட்டுகின்றது. வேதாந்தம் தோன்றிய நம் நாட்டில் மக்கள் எத்தகைய மயக்கத்தில் மூழ்கி இருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள். ஒரு சில மக்களைத் தீண்டினாலும் அவர்களைப் பார்த்தாலும் பாபமாம். இது என்ன அநியாயம்! பாமரமக்களின் சாபம் நம் தலைமீது இருக்கிறது. தெளிந்த ஆற்று நீர் ஓடிக்கொண்டிருக்கச் சாக்கடை நீரைப் பருக அவர்களுக்குத் தந்துகொண்டிருக்கின்றோம். செல்வத்தின் மத்தியில் இருந்துகொண்டு கோடானுகோடி மக்களைப் பட்டினி போட்டு வாட்டி வருகின்றோம். அத்வைதம் பேசிக்கொண்டு ஒரு சில மக்களை ஒதுக்கி வருகின்றோம். மனித குலத்தை மேன்மைப்படுத்தும் உன்னதக் கருத்துக்கள் நம்மிடத்தில்தான் இருக்கின்றன. ஆனால் அதே சமயத்தில் பாமரமக்களை நாம் நசுக்கி வருகின்றோம்." இங்ஙனம் சுவாமி விவேகானந்தர் பாமரமக்கள் புறக்கணிக்கப்பட்டிருப்பதைப்பற்றி வருந்துகின்றார்.

இனி, பாமரமக்களுடைய நிலை உயர்வதற்குச் சுவாமி விவேகானந்தர் கூறுவதாவது: "பாமரமக்கள் என்று கூக்குரல் இடுவதற்குப் பலர் இருக்கின்றார்கள். ஆனால் அவர்களை முன்னேற்றுவதற்குரிய செயல்களில் ஈடுபடுபவர்கள் எத்தனை பேர் இருக்கின்றார்கள்? பாமரமக்களின் துன்பத்திலும் துயரத்திலும் பங்குகொண்டு உண்மையாக உருகி அழுபவர்கள் எத்தனை பேர் இருக்கின்றார்கள்? பொதுவாக நம்மவர்களிடையே பேச்சு அதிகம். கிளிப்பிள்ளை போன்று புத்தகத்தில் படித்தவற்றையும், பிறரிடமிருந்து கேட்டவற்றையும் பேசிக்கொண்டிருப்போம். நமக்குப் பேசத்தான் தெரியுமேயன்றி எதையும் செயல்படுத்தத் தெரியாது. சோம்பலுக்கு நாம் அதிகம் இடம் கொடுத்திருக்கின்றோம். செயல் புரிய

வேண்டுமென்ற உற்சாகம் நம்மிடமில்லை. ஒருவரை ஒருவர் நேசிக்கும் தன்மையும் நம்மிடமில்லை. நம்மிடம் ஒற்றுமையுமில்லை. பாமர மக்களுக்காக உழைக்கிறோம் என்று சொல்லிக்கொள்பவர்களுள் சமூகத்தைச் சுரண்டும் நிலையில் ஒரு சிலர் இருக்கிறார்கள். நம் நாட்டிலுள்ள பாமர மக்கள் சோற்றுக்கவலை இல்லாதவர்களாகவும், கல்வி அறிவு உடையவர்களாகவும் விளங்கினாலன்றி நம் நாடு முன்னேறாது. எனவே நாம் அவர்களுடைய முன்னேற்றத்தில் முதலில் கருத்துச் செலுத்த வேண்டும். அவர்களுடைய நிலையைப்பற்றி நம் உள்ளம் சிந்திக்கவேண்டும். பொருள் படைத்தவர்கள் பாமர மக்களின் முன்னேற்றத்திற்குத் தங்கள் பொருளைத் தாராளமாகச் செலவழிக்க வேண்டும். அறிவு படைத்தவர்கள் தங்கள் அறிவைப் பாமர மக்களுக்குக் கல்வி புகட்டுவதில் பயன்படுத்தவேண்டும். ஒழுக்கத்திலும் அறிவிலும் அவர்கள் நிலை உயரவேண்டும். சமயத்தின் மூலமாக அவர்களுக்கு உலகியல் அறிவையும் புகட்டவேண்டும். கல்வியை நாடி அவர்கள் வராவிட்டால் அவர்களை நாடிக் கல்வி போகவேண்டும். அவர்கள் தங்கியிருக்கும் குடிசைகளுக்கு மாலை நேரத்தில் சென்று அவர்களை ஒன்று கூட்டி அவர்களுக்குக் கணிதம், வரலாறு, நிலநூல், விஞ்ஞானம் முதலியவற்றைப் படத்துடன் விளக்கவேண்டும்.''

''வீரர்களுடைய வரலாறுகளைக் கதை ரூபமாகக் கூறி அவர்களிடத்தில் உற்சாகத்தை உண்டு பண்ணவேண்டும். அவர்களுடைய வாழ்க்கைப் பிரச்னையை அவர்களே தீர்த்துக் கொள்வதற்கு அவர்களை ஆயத்தப்படுத்த வேண்டும். ''நீங்களும் எங்களைப் போன்ற மனிதர்கள்; எங்களுக்கு உள்ள உரிமைகள் உங்களுக்கும் உண்டு'' என்று அவர்களுக்கு எடுத்துக்கூற வேண்டும். யாரையும் கீழ்நிலைக்குக் கொண்டுவரக்கூடாது. பாமரர்களைப் பிராம்மணர் நிலைக்கு உயர்த்துவது நம்முடைய திட்டமாக இருக்கவேண்டும். பிராம்மணர் நிலையில் இருப்பவர்களைப் பாமரநிலைக்குக் கீழே இறக்குவது நம்முடைய திட்டமாக இருக்கக் கூடாது. ஒவ்வொருவரும் தங்களை உயர்த்திக்கொள்வதற்கு உரிமை உண்டு. தங்களைத் தாங்களே உயர்த்திக்கொள்ள முயல்பவர்களுக்கு வாய்ப்புக்கள் கொடுக்கவேண்டும். மக்கள் அனைவரும் சமம் என்ற எண்ணம் எல்லாரிடமும் நிலவுவதற்கு நாம் பாடுபடவேண்டும். எல்லாரும் இறைவனுடைய குழந்தைகள். வீண் விவாதங்களிலும், சச்சரவுகளிலும் காலத்தைப் போக்கிக்கொண்டிருப்பதற்குப் பதிலாக நம்முடைய சக்திகளை எல்லாம் நம்மைப் பலப்படுத்துவதிலும், பாமரமக்களை முன்னேற்றுவதிலும் செலவழிப்போமாக.''

இங்ஙனம் சுவாமி விவேகானந்தர் பாமரமக்களின் முன்னேற்றத்தைப்பற்றிச் சிந்தித்து நமக்கு வழிகாட்டித் தந்திருக்கிறார். இக்கருத்துக்களை நாம் நடைமுறைக்குக் கொண்டுவந்து லக்ஷியத்தை அடையும் வரையில் அயராது உழைத்து வருவோமாக.

எழுந்திருங்கள்! விழித்திருங்கள்!! லக்ஷியம் கைகூடும்வரை உழையுங்கள்!!! என்ற சுவாமி விவேகானந்தருடைய சிந்தனையைச் செயல்படுத்துவோமானால் உலகில் நாம் உயர்நிலையை அடையலாம்.

---

ஜயப்பூர் கோவிந்தன் ஆலயத்திலுள்ள அர்ச்சகர்கள் பிரம்மச்சாரிகளாக இருந்தனர். ஒரு சமயம் அரசன் அவர்களைத் தம்மிடம் வரும்படி அழைத்தார். அவர்கள் அவ்வழைப்பை ஏற்றுக்கொண்டு அரசனிடம் செல்லவில்லை. அரசனைத் தங்களிடம் வரும்படி சொல்லியனுப்பினார்கள். அரசன் அவர்களைக் கட்டுப்படுத்துவதற்கு என்ன செய்யலாம் என்று தம் மந்திரிகளோடு ஆலோசனை செய்தார். அவர்களுக்கு விவாகம் செய்து வைப்பதே அவர்களைக் கட்டுப்படுத்துவதற்குச் சிறந்த உபாயம் எனத் தேர்ந்தார். அதன்படி பிரம்மச்சாரிகளாக இருந்த அர்ச்சகர்களுக்கு அரசன் விவாகம் செய்து வைத்தார். விவாகத்துக்குப் பிறகு அவர்களுக்குத் தேவைகள் அதிகமாயின. எனவே அரசன் அழைக்காமலேயே அரசனைத் தேடிக்கொண்டு அவர்கள் கையில் பிரசாதம் எடுத்துக்கொண்டுபோய் அரசனுக்கு வழங்கினார்கள். அர்ச்சகர்கள் குடும்பிகளான பின் சுதந்திர உணர்வு அவர்களை விட்டுப்போய்விட்டது.

— *ஸ்ரீ ராமகிருஷ்ணர்*

---

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன் )

यद्भासा भास्यतेऽर्कादि भास्यैर्यत्तु न भास्यते ।
येन सर्वमिदं भाति तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

यत् भासा (யத் பாஸா) எதனுடைய பிரகாசத்தால், अर्क आदि (அர்க்க ஆதி) கதிரவன் முதலியவை भास्यते (பாஸ்யதே) பிரகாசிக்கின்றனவோ, भास्यैः (பாஸ்யை:) பிரகாசிக்கின்ற இவைகளால் यत् तु (யத் து) எது ஒன்று न भास्यते (ந பாஸ்யதே) பிரகாசப்படுத்தப் படுவதில்லையோ, येन (யேந) எதனல் सर्व इदम् (ஸர்வம் இதம்) இவை அனைத்தும் भाति (பாதி) பிரகாசிக்கின்றனவோ...

"எதன் ஒளியால் சூரியன் போன்றவை பிரகாசம் அடைகின்றனவோ, ஆனல் எது இவற்றால் பிரகாசம் பெறுவதில்லையோ, எதனல் அனைத்தும் ஒளிர்கின்றனவோ அதுவே பிரம்மம் என்று உறுதியாக அறிந்துகொள்."

'ஜ்யோதிஷாம் அபி தத் ஜ்யோதி:' 'மெய்ச் சுடருக்கு எல்லாம் ஒளி வந்த' என்ற தொடர்கள் உணர்த்தும் தத்துவம் இப்பாடலில் தரப் படுகின்றது. 'சைதன்யம்' என்பது ஒளி நிறைந்த ஒன்றைக் குறிக்கும். பிரம்ம சைதன்யத்தால் ஏனைய அனைத்தும் சைதன்யமாகக் காணப்படுகின்றன. சூரியனுடைய ஒளியே நமக்கு அதிகப் பிரகாசம் உள்ளது. எனவே 'அர்க்க ஆதி' என்று கூறி சூரியன் ஒளி வீசக் காரணமாக உள்ளது பிரம்மன் என்றுரைப்பதால் பிரகாசிக்கக் கூடிய அனைத்தின் தொகையையும் உள்ளடக்குகின்ருர்.

கற்பூர ஆரத்தி சாதாரண கிரியை, மதச் சடங்கு. அதில் பெரும் தத்துவத்தைக் காணலாம். 'அங்கே சூரியன் பிரகாசிப்பது இல்லை; சந்திரன், நட்சத்திரம், மின்னல் இல்லை; இந்த அற்ப ஜோதியை என்னவென்பது! அந்தப் பொருள் பிரகாசித்தால் இவை அனைத்தும் பின் தொடர்கின்றன; அதனுடைய ஒளியில் இவை அனைத்தும் ஒளிர்கின்றன.

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்
ந இமா வித்யுதோ பாந்தி குதோயம் அக்னி:
தமேவ பாந்தம் அநுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி

(முண்டக உப. II, ii, 10)

ஆரத்தி காண்பிக்கும்பொழுது இந்தச் சுலோகத்தைக் கூறி, சாதாரண கிரியையும் மனதை அதீதத்திற்குக் கொண்டு செல்லக்கூடிய தன்மை உடைத்து என்று நம் மதம் உணர்த்தும் அழகுதான் எத்தகைத்து?

स्वयमन्तर्बहिर्व्याप्य भासयन्नखिलं जगत् ।
ब्रह्म प्रकाशते वह्नि प्रतप्तायसपिण्डवत् ॥

वह्निः (வஹ்நி:) நெருப்பு प्रतप्तः (ப்ரதப்த:) பழுக்கக் காய்ச்சப்பட்ட, अयसपिण्डवत् (அயஸ பிண்டவத்) இரும்புத் துண்டைப்போல் ब्रह्म (ப்ரஹ்ம) பிரம்மமானது अखिलं जगत् (அகிலம் ஜகத்) உலகம் அனைத்தையும் अन्तः बहिः (அந்த: பஹி:) உள்ளும் புறமும் स्वयं व्याप्य (ஸ்வயம் வ்யாப்ய) தானே பரவி இருந்து கொண்டு भासयन् (பாஸயன்) பிரகாசப்படுத்தி, प्रकाशते (பிரகாசதே) தானும் ஒளிர்கின்றது.

"காய்ச்சிய இரும்புத் துண்டின் உள்ளும், புறமும் பரவி அதைப் பிரகாசப்படுத்தி நெருப்பு தானும் பிரகாசிப்பது போல், அகில உலகின் உள்ளும் புறமும் பரவி, அதைப் பிரகாசிக்கச் செய்து, பிரம்மம் தானும் பிரகாசிக்கின்றது."

சச்சிதானந்த சொரூபமாய் உள்ளும் புறமும் ஊடுருவி, அதே சமயம், உலகிற்கு அப்பாற்பட்ட பாரமார்த்திகப் பொருளாகவும் பிரம்மம் திகழ்கின்றது. இயல்பாக இரும்பு கருமையானது, உஷ்ணமற்றது. நெருப்பில் அது இடப்பட்டதால் அதனுடைய இயல்பே மாறி, தீயாக மிளிர்ந்து, பிரகாசமும், உஷ்ணமும் உடையதாகக் காட்சியளிக்கிறது. ஜட மயமான ஜகத்தும் இவ்வண்ணமே பிரம்ம சொருபத்தில் ஒன்றுபடும்போது சைதன்ய மயமாகக் காட்சியளிக்கின்றது.

जगद्विलक्षणं ब्रह्म ब्रह्मणोऽन्यन्न किञ्चन ।
ब्रह्मान्यद्भाति चेन्मिथ्या यथा मरुमरीचिका ॥

जगत् विलक्षणं (ஜகத் விலக்ஷணம்) உலகிற்கு மாருன இயல்பு உடையது ब्रह्म (ப்ரஹ்ம) பிரம்மம்; ब्रह्मणः अन्यत् (ப்ரஹ்மண: அந்யத்) பிரம்மத்திற்கு அப்பாற்பட்டதாக किञ्चन (கிஞ்சன) வேறு எதுவும் न (ந) கிடையாது; ब्रह्मणः

अन्यत् (ப்ரஹ்மண: அங்யத்) பிரம்மத்திற்கு வேறாக यत् (யத்) எது भाति चेत् (பாதி சேத்) பிரகாசிக்கின்றதோ मिथ्या (மித்யா) அது பொய்த் தோற்றம், यथा (யதா) எவ்வாறு मरुमरीचिका (மருமரிசிகா) கானல் நீரோ.

பிரம்மம் உலகத்திற்கு மாறான இயல்பு கொண்டது; பிரம்மத்திற்கு அப்பாற்பட்டு வேறு எதுவும் கிடையாது. பிரம்மத்திற்கு வேறாக எதுவும் காணப்பட்டால், அது கானல் நீர் போன்று பொய்யானது.

அத்வைத வேதாந்தத்தில் மெய்ப்பொருள் (ஸத்) வரையறுக்கப்படும் நியதியை இந்தப் பாடல் குறிக்கின்றது. காலம், தேசம், காரண காரியத்திற்கு உட்பட்டது தோற்றம்-அஸத். இவற்றிற்கு அப்பாற்பட்டது பிரம்மம். காணப் படும் அனைத்தும் பிரம்மமே. ஏனெனில் பிரம் மனைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. அக் ஞானிக்கு உலகமாகத் தோன்றுவதை ஞானி பிரம்மமாகவே காண்கின்றான். கானல் நீரின் உண்மையை உணராதவன் அதன் பின்னே ஓடுவான். உண்மை உணர்ந்தவனோ, 'இது மித்யை' என்று அமைதியாக இருப்பான்.

"பல கோடிக்கணக்கான கிரந்தங்கள் எந்தத் தத்துவத்தை விவரிக்கின்றனவோ அதைப் பாதி சுலோகத்தில் கூறுகின்றேன். பிரம்மமே சத்யம்.ஜகத் மித்யை. ஜிவன் பிரம்மனைத் தவிர வேறு அல்ல."

**ப்ரபஞ்சோ யதி வித்யேத நிவர்தேத ந ஸம்சய:**
**மாயாமாத்ரமிதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்தத:**

பிரபஞ்சம் இருக்கின்றது எனின் அது கட் டாயம் மறைந்து போகும். இதில் ஐயமில்லை. த்வைதம் எல்லாம் மாயா வடிவமானது; பரமார்த்தப் பொருளோ அத்வைதம்.

(மாண்டுக்ய காரிகை I-17)

பிரம்மத்திற்கு வேறாக உலகைக் காண்பவர் கள் மருள் உடையோர். பட்டப் பகலை அவர் கள் இரவு என்று எண்ணி மயங்குவர். ஆனால் அருள் பெற்றோர் பார்க்கும் இடம் எல்லாம் அவர்களை ஆட்கொண்ட பெரிய பொருளின் மேலான நிலையைக் காண்பர். 'பட்டப் பகல் பொழுதை இருள் என்ற மருளர்... பார்த்த இடம் எங்கணும் கோத்தநிலை குலையாது பரம வெளி ஆக...' என்கிறார் தாயுமானவர்.

ஜகத் பிரம்மனில் மறைவது ஞானம்; பிரம் மத்தை மறைப்பது அக்ஞானம். "மரத்தை மறைத்தது மாமத யானை; மரத்தில் மறைந்தது மாமத யானை; பரத்தை மறைத்தது பார் முதல் பூதம்; பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்."

**दृश्यते श्रूयते यद्यद्ब्रह्मणोऽन्यन्न तद्भवेत् ।**
**तत्त्वज्ञानाच्च तद्ब्रह्म सच्चिदानन्दमद्वयम् ॥**

यत् यत् (யத் யத்) எதுவெல்லாம் दृश्यते (த்ருச்யதே) காணப்படுகின்றதோ श्रूयते (ச்ரு யதே) கேட்கப்படுகிறதோ तत् (தத்) அது ब्रह्मण: अन्यत्) ப்ரஹ்மண: அங்யத்) பிரம்மம் அன்றி न भवेत् (ந பவேத்) வேறு ஆவது இல்லை. तत्त्वज्ञानात् (தத்வஞானத்) மெய்ஞ் ஞானத்தைப் பெற்றபின் सच्चिदानन्दं (ஸச்சி தானந்தம்) சத் சித் ஆனந்த अद्वयम् (அத் வயம்) இரண்டற்ற तत् ब्रह्म (தத் ப்ரஹ்ம) பிரம்மமாக भवेत् (பவேத்) ஆகின்றான்.

"காணப்படுவது, கேட்கப்படுவது அனைத் தும் பிரம்மமே; ஞானம் அடைந்த பின் சத்சித் ஆனந்த அத்வய பிரம்மமாகவே ஆகின்றான்."

அக்ஞான நிலையில்பொறிபுலன்களால் உண ரப்படுபவை உலகிற்குத் தொடர்பு கொண்ட வைகளாகத் தோன்றுகின்றன. ஆயின் பொறி கள் அறிவன அனைத்தும் பிரம்மத்திற்கு வேறானவை அல்ல. மயக்கத்தில் உள்ள குழந்தை சர்க்கரையைக் காணாது பொம்மை யின் வடிவத்தையே காண்பது போன்றது இந்நிலை. விவேகம் வந்தபின் வடிவத்தைப் பாராட்டாது பொருளை அறிகின்றோம். அது போன்றது தத்துவ ஞானம். எனவே 'ப்ரஹ்ம வித் ப்ரஹ்மைவ பவதி — பிரம்மத்தை அறிந் தவன் பிரம்மமாகவே ஆகின்றான்' என்று உணர்த்தப்படும்.

**सर्वगं सच्चिदानन्दं ज्ञानचक्षुर्निरीक्षते ।**
**अज्ञानचक्षुर्नेक्षेत भास्वन्तं भानुमन्धवत् ॥**

सर्वगं (ஸர்வகம்) எங்கும் நிறைந்த सच्चिदानन्दं (ஸச்சிதானந்தம்) சத் சித் ஆனந்த பிரம்மத்தை ज्ञानचक्षुः (ஞான சக்ஷு:) ஞானக் கண்ணுடைய வன் निरीक्षते (நிரீக்ஷதே) நன்கு பார்க்கின்றான். भास्वन्तं भानुं (பாஸ்வந்தம் பாநும்) பிரகாசிக்கும் கதிரவனை अन्धवत् (அந்தவத்) குருடனைப்போல் अज्ञान चक्षुः (அஞ்ஞான சக்ஷு:) அறியாமை என்னும் கண்ணுடையவன் न ईक्षेत (ந ஈக்ஷேத) காண்பது இல்லை.

# சனுதன தர்மத்தின் சிறப்புகள்

( திரு. V. S. நரசிம்மன் )

சமய நெறியைச் சார்ந்த சான்றோர்கள் தம்முடன் வைக்கும் தொடர்பு சமுதாயத்தில் புதிய மறுமலர்ச்சியை உண்டாக்கும். *1978* அக்டோபர் மாதம் இத்தாலி நாட்டிலிருந்து சில கிறிஸ்துவப் பாதிரிகள் தபோவனத்திற்கு வருகை புரிந்தனர். திரு. T. ராமச்சந்திரன் என்ற அன்பர் இதற்கான முன்னேற்பாட்டை மனமுவந்து செய்தார். ஒருநாள் முழுவதும் தபோவனத்தில் தங்கிப் பிரார்த்தனை, கலை நிகழ்ச்சி, கூட்டு வழிபாடு, யோக ஆசனம், சமயச் சொற்பொழிவு எனப் பல நிகழ்ச்சிகளில் பங்கேற்றுப் பயனடைந்தனர். சிறப்பான முறையில் தங்களை உபசரித்தமைக்காகக் குழுவின் தலைவர் நன்றிதெரிவித்தார். "ஹிந்துப் பண்பாட்டின்படி விருந்தினரை உபசரிப்பது பெரிய தர்மம். 'அதிதி தேவோ பவ' என்று வேதம் நியமிக்கின்றது. எனவே நீங்கள் நன்றி செலுத்தக் கூடாது. நாங்கள்தாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர்கள்" என்று நம் பண்பாடு அவர்களுக்கு உணர்த்தப்பட்டது. பாரதீயத்தின் பெருமையை வியந்து பாராட்டி அவர்கள் விடைபெற்றனர். அன்றைய நிகழ்ச்சி முழுவதும் தொகுத்து எழுதப்பட்டு, 'Hinduism Hosts Christianity' என்ற தலைப்பில் தபோவன வெளியீடாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது. மூன்று சமயச் சொற்பொழிவுகள், அதன் பின் நடைபெற்ற 'சந்தேகம் தெளிதல்' நிகழ்ச்சிகள் ஆகியவை மட்டும் மொழி பெயர்க்கப்பட்டு 'சனுதன தர்மத்தின் சிறப்புகள்' என்ற தலைப்பில் கட்டுரை வடிவில் இங்குத் தரப்படுகின்றன.

**ஹிந்து மதம்**

ॐ पूर्णमदः पूर्णमिदम् पूर्णात् पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥
॥ ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

"பாரமார்த்திக சத்பொருள் 'பூரணம்' எனப்படும். இப்பொருள் அனைத்திலும் நிறைந்து காணப்பட்டு, அவற்றைத் தாண்டிய நிலையிலும் உள்ளது. பூரணத்தினின்று பூரணத்தை எடுத்துவிட்டால், எஞ்சி நிற்பதும் பூரணமே." இந்தப் பூரணப் பொருளை உணர்ந்தவன் பரிபூரண நிலையை எய்துகின்றான்.

சமயங்கள் அனைத்திற்கும் தாயாகத் திகழ்வது ஹிந்து மதம். இங்கு எல்லா மதங்களுக்கும் இடம் உண்டு. ஏனைய மதங்களைக் காட்டிலும் அடிப்படையில் வேறானது இம்மதம். *1*) ஹிந்துமதம் எப்பொழுது துவங்கியது என்று கூற முடியாது. மனித இனத்தைப் போன்று இதுவும் தொன்மையானது. 2) ஏனைய மதங்களுக்குக் குறிப்பிட்ட ஸ்தாபகர்கள், குறிப்பிட்ட தோற்றுவாய் உண்டு. ஆனல் இத்தகைய வரம்பிற்கு இது உட்பட்டது அன்று. 3) ஏனைய மதங்களைக் கட்டிக் காக்க, பிரச்சாரம் செய்ய மதபோதகர்கள் உண்டு. இத்தகைய செயற்கை ஊன்றுகோல்களின் தேவையின்றி, சிறந்த தத்துவங்களைத் தன்னகத்தே அடக்கிக்கொண்டு திகழ்வது ஹிந்து மதம். தனிப்பட்ட நபர்களைச் சாராது, தத்துவத்தை வலியுறுத்துகின்றது; குறிப்பிட்ட காலம், இடம் என்று வரையறையின்றி உலகில் என்றும், எவருக்கும் பொருந்தக்கூடிய சத்தியத்தை எடுத்துரைப்பதால் இது 'சனுதன' தர்மம் எனப்படும்.

**வேதம், உபநிஷத், வேதாந்தம்**

வேதம் என்பது இயற்கை. இயற்கையுடன் இணைந்து வாழ்வது மனிதனின் தனிப்பெரும் பேறு ஆகும். நான்கு வேதங்களும் இயற்கையை, அதன் தெய்வீகத்தை விவரிக்கின்றன. 'வித்' என்னும் வினைச்சொல் 'வேதம்' என்பதின் வேர் ஆகும். 'வித்' எனின் 'அறிவு' எனப் பொருள். அறிவின் எல்லை, வேதத்தின் அந்தம், வேதாந்தம் ஆகின்றது. வேதத்தின் ஊடே பல உபநிஷத்துக்கள் மிளிர்கின்றன.

வேதம் எப்போது தோன்றியது என்று எவராலும் கணிக்க இயலாது. வேத மந்திரங்களைத் தம் அனுபவத்தில் கண்டவர்கள் ரிஷிகள். எனவே அவர்கள் 'மந்த்ர த்ரஷ்ட' எனப்படுவர். ரிஷிகளின் காலமும் சரியாக நிர்ணயிக்கப்படவில்லை. காலத்தின் பல்வேறு கட்டங்களில் அவர்கள் தோன்றியுள்ளனர்.

ரிஷிகளின் அனுபவமே உபநிஷத்ஆகும். *108*

உபநிஷத்துக்களில் மிகவும் முக்கியமானவையாகப் பத்து உபநிஷதங்கள் கருதப்படுகின்றன. உபநிஷதங்களிடையே மாறுபட்ட தத்துவங்களோ, கருத்து வேறுபாடோ கிடையாது. அனுபவ மொழிகளிலேயே வேறுபாடு ஏற்கத்தக்கது அன்று. குறிப்பிட்ட கணக்கு ஒன்றை விதிகளை அனுசரித்துப் போட்டால் விடை மாறக்கூடாது. அங்ஙனம் ரிஷிகளும் ஒரே மெய்ப்பொருளைப் பற்றிய சத்தியத்தைப் பேசுகின்றனர். 'ஒரு குறிப்பிட்ட மனிதரோ, புத்தகமோ வலியுறுத்தும் கருத்தை (authority) ஆராயாது ஏற்கக்கூடாது' என்பது வேதாந்த நெறி. கருத்தை விமர்சித்து, தெளிந்து அதன்பிறகே ஒப்புக்கொள்ள வேண்டும் என்பது இதன் சிறப்பாகும். கீதையின் பதினெட்டு அத்தியாயங்களில் பார்த்தனுக்குப் பார்த்தசாரதி பல தத்துவங்களை விளக்கினர். கடைசியில் கீதாச்சாரியர் என்ன விதித்தார்? 'விம்ருஸ்ய ஏதத் அசேஷேண, யதா இச்சஸி ததா குரு- இதை முழுமையாக ஆராய்ந்து எப்படி விரும்புகிருயோ அப்படியே செய்' என்பதே அறிவுரை. அர்ஜுனன் எந்த விதத்தில் பதில் தருகின்ருன் பாருங்கள்: "நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதி: லப்த்தா, த்வத் ப்ரஸாதாத் மயா அச்யுத, ஸ்தித: அஸ்மி கத ஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ — என்னுடைய சொரூப நிலையை உணர்ந்ததால் என் மயக்கம் அகன்றது; அச்சுதனே, இதுவும் உன் அருளே. மனதின் ஐயங்கள் அகன்று உறுதியாக நிற்கின்றேன். உங்களுடைய சொற்களைக் கடைப்பிடித்துச் செயலாற்றுவேன்." நாம் அனைவரும் இத்தகைய அனுபவ நிலைக்கு வரவேண்டும். யாரோ ஒருவர் ஞானம் பெற்ருர், புதிய அனுபவம் அடைந்தார் எனின், அது மற்றவர்களுக்கும் போதுமானது ஆகாது. தன்னுடைய உடல் வளர்ச்சிக்குத் தானே உண்ண வேண்டும் அன்றே? அதுபோன்று ஆன்ம பரிபாகத்திற்கும் அவரவர் பெறும் அனுபவமே பயன் தரும். ஆத்மீக வாழ்வு அப்போதுதான் முழுமை பெறும். 'வேதாஹம் ஏதம் புருஷம் மஹாந்தம்-பரம்பொருளாகிய இந்தப் புருஷனை நான் அறிகின்றேன்' என்ற ரிஷியின் மொழிகளை ஒவ்வொருவரும் உரைக்கும்படியான உயர்நிலைக்குச் செல்லவேண்டும். இத்தகைய சிறந்த லட்சியத்தைக் கொடுக்கும் வேதாந்தம், ஹிந்துமதம் மனித இனத்திற்கு அளிக்கும் மிகச் சிறந்த கொடையாகும். "புத்தி பூர்வமாக ஆராயவேண்டும் என்று எடுத்துக் கொண்டாலும், உபநிஷத் ஆராய்ச்சி மிகச் சிறந்தது— Even as an intellectual study, the study of the Upanishads is the healthiest" என்று சுவாமி விவேகானந்தர் கூறியுள்ளார். வேதாந்தம்ஆத்ம ஞானம்; அதை அடையும் நெறி யோகம் எனப்படும்.

**தர்சனம் (தத்துவம்)**

ஹிந்துமதத்தில் தர்சனம் (தத்துவம்), இதிகாசம், புராணம், கிரியை (சடங்குகள்) என்று நான்கு சிறப்பு அம்சங்கள் உள்ளன. தத்துவத்தை விளக்குகின்ற அடிப்படைச் சாஸ்திரங்களைப் 'பிரஸ்தானத்ரயம்' என்று குறிப்பிடுவர். உபநிஷத், பிரம்ம சூத்திரம், பகவத் கீதை என்பவை இந்த மூன்று சாஸ்திரங்கள். உபநிஷத் தத்துவத்தைச் சுருக்கமாகச் சூத்திரங்களில் (formulae) தருவது பிரம்ம சூத்திரம். அதே தத்துவத்தைச் சாதாரண மக்களுக்கு என்று எளிதான முறையில் தருவது பகவத் கீதை. மேலும் ஆறு அடிப்படைச் சாஸ்திரங்களில் ஹிந்துமதம் விளக்கப்படுகின்றது. ஆறு தரிசனங்கள் (ஷட்தர்சன) என்று இவை பெயர் பெறுகின்றன. 1. **வைசேஷிகம்**-சிந்தனை, புரிந்துகொள்வது ஆகியவற்றை நெறிப்படுத்துவது. 2. **நியாயம்**-தான் பெற்ற அறிவைக் கோர்வையாகத் தெரிவிப்பது. 3. **பூர்வ மீமாம்சம்**-பூவுலகிலும், மற்ற லோகங்களிலும் பெற வேண்டும் என்று விரும்புகின்ற பேறுகளை அதற்கு என்று குறிப்பிட்ட கர்மத்தை முறைப்படி செய்வதால் அடையலாம். எனவே இது 'கர்ம மீமாம்சம்' என்றும் குறிப்பிடப்படும். 'கர்மேதி மீமாம்ஸகா:' என்று கர்மத்தை மீமாம்ஸகர்கள் தலையாகக் கொள்வது உணர்த்தப்படுகின்றது. 4. **சாங்கியம்**-பிரபஞ்சத்தை விளக்குவது இந்தத் தரிசனம். பல யுகங்களாக நடைமுறையில் மாற்றம் எதுவுமின்றிப் பிரபஞ்சம் செயல்படுகின்றது. பௌதிக விஞ்ஞான உண்மைகளைப் பல ஆண்டுகளுக்கு முன் ஆராய்ச்சி செய்தது போல் இன்றும் ஆராயலாம். அதுபோன்று பிரபஞ்ச உண்மைகளை ஆராய்வது சாங்கிய தத்துவம்.

# குட்டித் திருவாசகம்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A. )

நடராஜப் பெருமான் ஆடுகின்ற தாண்டவம் பஞ்ச கிருத்திய தாண்டவம் ஆகும். பஞ்ச கிருத்திய தாண்டவத்தை "ஐந்தொழில் கூத்து" என்பார்கள்.

ஞான நடனம் படைத்தல் நடனம் ஆகும். ஆனந்தநடனம் காத்தல் நடனம் ஆகும். ஸ்தூல நடனம் அழித்தல் நடனம். சூக்ஷ்ம நடனம் மறைத்தல் நடனம் ஆகும். பஞ்சாட்சர நடனம் அருளல் நடனம் ஆகும்.

நடராஜப் பெருமான் திருக்கரங்களிலே டமருகம் என்னும் உடுக்கை ஏந்திய திருக்கரத்தில் சிருஷ்டி (படைப்பு) உண்டாகிறது.

அபயம் என்று காட்டுகின்ற திருக்கையில் ரட்சித்தல் (காத்தல்) அமைகிறது.

அக்னி ஏந்திய திருக்கரத்தில் [அழித்தல்-] சம்ஹாரம் நடைபெறுகிறது.

ஊன்றிய திருப்பாதத்தில் திரோதானம் [மறைத்தல்] ஏற்படுகிறது.

தூக்கி ஆடிய பாதத்தில் அருளல் [அனுக்ரஹம்] தோன்றுகிறது.

"காண்டற்கு அரிய பேரொளியை" — காணுவதற்கு மிகவும் அருமையான பெரிய ஒளிப் பிழம்பாக உள்ள சிவபெருமானைக் கண்டேன் என்கிறார் அதிவீரராமர்.

இந்தப் பாடலில் அவர் முதலில் என்ன சொல்லிப் பாடுகிறார்? இறைவனே ஞானச் சாரியனாக வந்து என்னை ஆண்டுகொண்டான் என்றார்.

இறைவனே ஞான குருவாக வந்து அடிமையாக்கிக் கொண்டதால், இறைவனுடைய திருவருளைப் பெற்றார். அத்திருவருள் கருணைப் பெருக்கால், குருவினிடத்து நல் உபதேசம் பெற்றார்.

குருவிடத்து உபதேசம் பெற்ற ஆன்மா சிவப்பேறு அடையும். சிவப்பேறு அடைகின்ற ஆன்மாவுக்கு இறைவன் ஒளிப்பிழம்பாகக் காட்சி தருகிறான்.

"சோதியே சுடரே சூழ் ஒளி விளக்கே" என்பது ஆன்றோரின் அனுபவ வாக்கு. திரு ஐந்து எழுத்தாகிய பஞ்சாட்சர மந்திரத்தை அகத்தில்கொண்டு வாசனமலங்கள் அனைத்தும் நீங்கப் பெற்றவர் அதிவீரராமர். எனவே, சிவதரிசனம் அவருக்குச் சோதி தரிசனமாகத் துலங்கியது.

ஒரு பாத்திரத்தில் வாயு நிரம்பி இருக்கும். வாயு நிரம்பி இருப்பது நம் கண்ணுக்குத் தெரியாது. பாத்திரம் முழுவதிலும் தண்ணீரை ஊற்றி நிரப்பி விட்டால், கண்ணுக்குத் தெரியாமல் இருக்கும் வாயு முற்றிலும் வெளியேறி விடுகிறது. முழுவதும் நிரப்பாமல் போனால், தண்ணீர் நிரம்பிய அளவு போக, எஞ்சிய பகுதியில் காற்று இருந்தே தீரும். வாயுவை முழுவதுமாக நீக்குவதற்குத் தண்ணீரைப் பாத்திரம் முழுவதும் நிரப்பிவிட வேண்டும்.

அதுபோன்று நம் உள்ளத்தை ஆதாரமாகக் கொண்டு, நம்மையெல்லாம் ஆட்டிப் படைத்து வரும் பாசம் முழுவதும் நீங்கவேண்டுமானால், நம் உள்ளத்தில் எல்லாம் சிவ சிந்தனையே நிரம்பியிருக்க வேண்டும். அப்படி நிரம்பி இருந்தால் மனதுக்குள்ளே பாசம் இருக்க வழியில்லை. இருளும் ஒளியும் ஒரே இடத்தில் இருக்கமாட்டா. தண்ணீரும் வாயுவும் பாத்திரத்துக்குள் சேர்ந்திருக்க மாட்டா. சிவ சிந்தனையும் பாசமும் சேர்ந்திருப்பதில்லை.

அதிவீரராமர் உள்ளத்துக்குள்ளே படிப் படியாகச் சிவ சிந்தனை புகுந்து வளர்ந்தது. பாசமும் சிறிது சிறிதாக அகலத் துவங்கியது. சிவ போத வாழ்க்கைப் பேறு அவருக்குக் கிடைத்தது. மாயமெல்லாம் நீங்கியது. மாறாத சிவானுபவம் பெற்றார் அதிவீர ராமர்.

அவ்வாறு சிவானுபவம் பெற்ற அவர் கரிவலம் வந்த நல்லூர் என்னும் க்ஷேத்திரத்தில், களாமரம் என்னும் ஸ்தல விருக்ஷத்தின் கீழ் எழுந்தருளிய எம்பெருமானாகிய சிவனின் ஜோதிரூப தரிசனம் கிடைக்கப்பெற்றார்.

"கிளர்ந்த காலினால் அங்கியை
நிமிர்த்துமேற் கிடைத்து
வளர்ந்த பிங்கலை இடைநடு
வழியுகு மதியின்
விளைந்த இன்னமுது உண்டுநம்
விடையவன் வடிவம்

குளந்தனில் குறித்து அவன்
உருக்கொண்டவர் இவர்காண்''

என்பது பரஞ்சோதி முனிவருடைய வாக்கு.

மேல் எழுந்து வருகின்ற பிராணவாயுவால் இதயஸ்தானத்தில் உள்ள அக்னியை எழுப்பி மேலே சென்று, குறையாத இடகலை பிங்கலை களுக்கு நடுவில் உள்ள சுழிமுனை வழியாகச் சிந்தும் சந்திர மண்டலத்தில் விளைந்த இனிய அமுதத்தை நுகர்ந்து, நம் சிவபெருமான் திரு உருவத்தை லலாட ஸ்தானத்தில் சிந்தித்து, அவனது சாரூப்யத்தை அடைந்தவர்கள் இவர் கள்'' என்று சகமார்க்க நிலையினர்களான யோகிகளைப் பற்றிப் பரஞ்சோதியார் குறிப் பிடுகிறார்.

நெற்றியாகிய ஆக்ஞா ஸ்தானத்தில், அந் தர்முகமாகத் தரிசித்தோர்க்குச் சிவபெருமா னது ஜோதிரூப தரிசனம் கிடைக்கும் என்பது ஆன்றோர் அனுபவம்.

அதிவீரராம பாண்டியர் சிவானுபவம் பெற்று, சச்சிதானந்தமாகிய சிவபெருமானைப் பேரொளிப் பிழம்பாகக் கண்டு தரிசித்தார் என்பதைப் பரஞ்சோதியார் அனுபவத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டியது.

"பாதி இரவில் எழுந்தருளிப் பாவியேனை எழுப்பி அருள், ஜோதி அளித்து என் உள் ளகத்தே சூழ்ந்து கலந்து துலங்குகின்றாய்" —தில்லையம்பலத்தில் எழுந்தருளியுள்ள அம் பலவாணனே! நடுநிசியில் எளியோனாகிய என்னிடத்து அருள்கொண்டுவந்து,பாவியேனை எழுப்பி அருள் பெருஞ் ஜோதியை அளித் தருளி என் உள்ளத்தின் உள்ளே குடிபுகுந்து வீற்றிருக்கின்றாய் — என்கிறார் இராமலிங்க சுவாமிகள்.

''கண்ட கண்கள் புனல்பாயக்
களிப்பாய் உள்ளம் கரையழிய
விண்ட மொழியின் நாக்குழற,
விம்மி மேனி மயிர்பொடிப்பப்
பண்டை வசம்போய்ப் பரவசமாய்ப்
பரமா னந்தத் தெளிநறவம்
உண்டு தெவிட்டா அருள்புரிந்தான்
கருவை வாழும் உரவோனே.''

பரமாச்சார்யனைக் களாமர நிழலில் எழுந் தருளியுள்ள சிவபெருமானைக் கண்ணாரக் கண்ட தாகப் பாடல்-7ல் குறிப்பிட்டார்.

அவ்வாறு கண்டதால் உடல் புளகாங்கிதம் அடைந்த விதத்தையும், உள்ளம் பரமானந்தம் கொண்ட பாங்கையும் இப்பாடலிலே அதிவீர ராமர் குறிப்பிடுகிறார்.

பரமாச்சார்ய புருஷனைத் தரிசித்த சமயம், கண்கள் ஆனந்த பாஷ்பம் சொரிந்தன. உள் ளம் ஆனந்தக் களிப்பில் எல்லை கடந்து சென் றது. பேச முயன்றேன்; மொழிகள் தடுமாறின; நாக்குக் குழறியது. மேனி பூரித்துப் புளகாங் கிதம் அடைந்தது. முன்னால் உள்ள தன்வசம் போய், உள்ளம் பரமானந்தப் பரவசப்பட்டு, சிவானந்தத் தேனைப் பருகித் தெவிட்டா இன்பநிலை அடைந்தது. இவ்வாறு திருக் கருவையில் வீற்றிருக்கும் ஞானமூர்த்தி திரு வருள் செய்தான்.

''கண்ட கண்கள் புனல் பாய''

வேதங்களும் தேடிக் காண்பதற்கு அரிய வரும், திருவடி ஞானத்திலிருந்து நீங்காத மாணவர் பலரை உடையவரும், அம்பலத் திலே திருநடனம் செய்தருள்கின்ற ஆனந்தத் திரு உருவை உடையவரும், கல்லால மரத் தின் கீழலில், சனகாதி முனிவர் நால்வருக்கும் உபதேசித்தருளியவரும் ஆன எம்பெருமான் சிவபெருமான் ஞான ஆச்சார்ய புருஷராக வீற்றிருப்பதைக் கண்ட அதிவீரராமரின் கண் களில் ஆனந்தக் கண்ணீர் வெள்ளமாக வழிந் தோடியது. சிவபெருமான் அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே, சட்சு (கண்) தீட்சையால் வினைகள் எல்லாம் அதிவீர ராமரை விட்டு அகன்றோடுகின்றன. அவரை அறியாமலே கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வடிகிறது.

மனத்திற்கும், உடலில் உள்ள உறுப்புக் களுக்கும் தொடர்பு உண்டு. மனம் எண்ணுகிற விதத்தில் உறுப்புகள் செயல்படும். இறை வனைக் கண்ணால் கண்ட உள்ள நெகிழ்ச்சியி லேயே, அதிவீர ராமருடைய கண்களிலிருந்து கண்ணீர் வடிகிறது.

மனதில் உள்ள வருத்தத்தைக் கண்களிலி ருந்து உணர்ந்து கொள்ளலாம்.

"நயதி" என்ற சொல்லுக்கு நல்லவற்றைக் காண்பது என்பது பொருள். நயதி என்ற சொல்லிலிருந்து "நயனம்" என்ற சொல் வந் தது. நயனம் என்றால் கண். அப்படியானால் நல்லவற்றைக் காண்பதுவே கண்.

# துறவு

(சுவாமி அசலானந்தர்)

துறவு என்பது, தன் உடலின் மீதும் உடைமைகளின் மீதும் கொண்டுள்ள பற்றினை, (அவற்றின் நிலையாமையினை உணர்ந்த பின்பு) வேரறுத்த நிலையாம். இந்நிலையை அடைய விரும்பித் தீவிரமாக முயல்கின்றவர்கள் துறவிகள் எனப்படுவர். ஈண்டு, 'உடல்' எனப்படுவது ஸ்தூல சரீரத்தை (பரு உடல்) யும், சூக்ஷ்ம சரீரத்தை (நுண் உடல்) யும் ஒருங்கே குறிக்கும். சூக்ஷ்ம சரீரம் என்பது கர்மேந்திரியங்களான வாய், கை, கால், குதம், குறி (वाक्, पाणि, पादम्, पायु, गुह्यं) என்னும் ஐந்தும், ஞானேந்திரியங்களான ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் (शब्द, स्पर्श, रूप, रस, गंध) என்னும் ஐந்தும், ஆசை எழுவதற்கு ஏதுவாக உள்ள அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கும் ஒன்று சேர்ந்து குறிக்கப்படும். இவைகளின் மீதுள்ள பற்று உடல் பற்று என்றே மொழியப்படும்.

மனிதன் இயற்கையை ஆளவந்தவனும் அல்லன்; அதை அடிமைப்படுத்த வல்லவனும் அல்லன். இயற்கையோடு தெய்விக இணக்கம் வைத்து இயற்கைத் தாயை முறையாக வணங்கித் தாயின் அருள் பிரசாதத்தைப் பெற்றுத் தன்னைப் பரிபூரணன் ஆக்குதற்கென்றே மனிதன் வாழ்ந்து வருகிறான். வாழ்க்கை என்பது வெறும் இன்பம் பெறுவதற்கன்று. மானுடப்பிறவியின் முடிவான குறிக்கோள் தான் பரிபூரணன் ஆவதேயாம். இக்குறிக்கோளையடைய துறவுநிலை வழிவகுக்கிறது. மனிதன் தன்னைப் பக்குவப்படுத்திய தன் பயன்கள் அனைத்தும் 'சந்நியாசி—துறவி' என்னும் சொல்லிலே அடங்கிக் கிடக்கின்றன.

பரிணமத்தில் உயிர்கள் அஃறிணையினின்று உயர்திணை எய்துதற்கு எடுத்துக்கொள்ளும் கால தேச வர்த்தமானத்துக்கு அளவில்லை. உயர்திணையை எட்டியுள்ள உயிர்களுக்கு இன்பதுன்பங்கள் வெளிப்படையாக மிக அதிகரிக்கின்றன. துன்பத்தைத் தவிர்த்து இன்பத்தில் நிலைநிற்க அறிவுடைய உயிர்கள் அனைத்தும் முயன்று வருகின்றன.

துன்பங்களுக்கெல்லாம் காரணம் ஆசையே ஆகும். இவ் ஆசைக்கு அடிப்படைக் காரணம் பற்று ஆகும். "सङ्गात् सञ्जायते कामः—ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: — பற்று ஆசையாகப் பரிணமிக்கிறது" என்கிறது கீதை. ஒருவனின் வீழ்ச்சிக்குப் பற்றுதலே காரணமாகும். பற்று என்பது முற்றிலும் நீங்கப் பெற்றவனுக்கே துன்பம் ஏதுமில்லை. "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்கிறான் பற்று நீங்கியவன். எனவே துன்ப நீக்கத்திற்குப் பற்றைத் துறத்தல் வேண்டும். இதனைப் பற்றித் திருவள்ளுவர் கூறுவதாவது:

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

ஒருவன் எந்தெந்தப் பொருள்களிலிருந்து பற்று நீங்கியவனாக இருக்கிறானோ அந்தந்தப் பொருள்களால் அவன் துன்பம் அடைவதில்லை.

ஈண்டுத் துன்பம் என்பது இம்மையில் பொருள்களைத் தேடுதலால் வரும் துன்பத்தையும்,அவைகளைக் காப்பாற்றுதலிலும் இழத்தலிலும் வரும் துன்பத்தையும், மறுமையில் பாவத்தால்வரும் துன்பத்தையும் குறிக்கும். எல்லாப் பொருள்களின் மீதும் உள்ள பற்றுதலைஒருங்கே விடுதல் தலையாயது. அல்லாவிடில் ஏதேனுமொருபொருளில் பற்று இருப்பினும் அதன் மூலமாகத் துன்பம் எழவே செய்யும்; முற்றும் விலகாது. ஆகவே எவ்வகைப்பற்றும் எப்பொருளிடத்தும் வைக்காதிருப்பதே துன்ப நீக்கத்திற்கு ஏதுவாம். அதுவே முற்றத்துறவு எனப்படும்.

பொருள்கள் மீது பற்று இல்லாதவிடத்துப் பொருள்களை நுகர்வதால் வரும் இன்பம் இல்லாது போய்விடுமே! அதுபோழ்து உண்மையில் அந்நிலை எப்படியிருக்கும்? — என வினவின், சாதாரணமாகப் பொருள்கள் காரணமாக மனம், மொழி, மெய்—இவை அலைந்து துன்பத்தை உருவாக்குகின்றன அல்லவா? இத்துன்பம் பற்றறுத்தலால் இல்லாதொழிகிறது. அத்துடன் பொறிகள் யாவும் நன்நெறிக்கண் சேருதலால் தனித்ததோர் இன்பத்தைக் கொணர்கின்றன.

இளமையிலேயே இதனை நன்கு சிந்தித்துப் பற்றறுத்தலைக் கைக்கொள்வது மேலாகும். இதனைத் திருவள்ளுவர் வாய்மொழியில் காண் போம். 'வேண்டின் உண்டாகத் துறக்க' என் கிறார். அதாவது, 'துறவுத் தன்மையை இள மையிலேயே கொண்டால்தான் பேரின்பத்தை நெடுங்காலம் அனுபவிக்கலாம்' என்கிறார். மேலும் வள்ளுவர் 'துறந்தபின் ஈண்டியற் பால பல' என்பதன் மூலம் துறவினால் துன்பங்கள் தடுக்கப்படுவது மட்டுமல்லாமல் அதனால் இன்பமும் கிட்டுகிறது' என அறுதியிட்டுக் கூறுகிறார்.

இதையொட்டி ஸ்ரீ கிருஷ்ண பகவானின் கருத்துக்களைக் காண்போம்: (கீதை அத். 5. சுலோ. 21 & 22.)

**பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத்ஸுகம்**
**ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்னுதே**

"புறப்பொருளில் மனம் பற்றாதவன் ஆத்மா வில் இன்பம் எய்துகிறான். பிரம்ம சமாதியில் மனதையுடைய அம்மனிதன் அழியாத சுகத்தை அடைகிறான்."

புறத்தில் பொறிகள் வாயிலாக வரும் புல னின்பங்கள் (போகங்கள்) நிலையற்றவைகள். அவைகள் சிற்றின்பம் எனப்படுகின்றன. தூய்மையடைந்த அந்தக்கரணம் ஆத்மானந் தத்தை அனுபவிக்கிறது. அது தேயாது தெளிவடைகிறபடியால் அதற்குப் பேரின்பம் என்று பெயர்.

புலனின்பத்தைச் சிற்றின்பம் என்று கூறு வதற்குக் காரணம் யாதெனில்:

**யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா: து:கயோனய ஏவ தே**
**ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத:**

"இந்திரிய விஷயங்களில் தோன்றிய புல னின்பங்களே துன்பத்துக்கு ஏதுவானவை களாகும். குந்தியின் மகனே, ஆதியந்தமுடைய அவைகளில் ஞானி (துறவி) இன்பமுறுவ தில்லை."

மனிதனுக்கு வருகிற எல்லாத் துக்கங்களுக் கும் காரணம் புலனின்பத்தை நாடுதலேயாம். பொறிகள் பொருள்களோடு தொடர்பு வைக் கும்பொழுது சுகம் ஆரம்பிக்கிறது. பொருள் களை விட்டுப் பொறிகள் விலகும்பொழுது துக்கமாகப் பரிணமிக்கிறது. இடையில் மின் னல்போன்று சிறிது இன்பம் தென்பட்டது தான் மிச்சம். அறிவு இல்லாத விலங்குகளும் மாக்களும் அவைகளை நாடிச் செல்கின்றன. விவேகமுடையவன் அவைகளை விலக்கிவிடு கிறான்.

'அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை'—முக் தியை நாடுபவர்கள் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளுக்குரிய ஊறு, சுவை, ஒளி, மணம், ஓசை ஆகிய ஐம்புலன் களையும் தம்போக்கில் மனதைக் கீழ்மையுறும் படி நுகரச் செல்லவிடாது தடுத்தல் வேண்டும். ஏனெனின் அந்நுகர்ச்சி 'விறகு பெற்ற தழல் போல்' பெருகும். ஆசை ஒருநாளும் மாயாது.

பற்றில் இருவகை உண்டு. ஒன்று அகப் பற்று, மற்றது புறப்பற்றும். அகப்பற்று என் பது தன்னை ஒருவன் உடல் மயமாகக் கருதி "யான்" என்று அகங்கரித்து, தன் உடலையே முதலும் முடிவுமாகக் கொண்டிருக்கும் தன்மை யாம். இவ் அகங்கார உணர்வின் தடிப்பு, சற்றேறத்தாழ அனைவரிடத்தும் காணப்படு கிறது. இத்தடிப்பு மிக உடையவன் அசுரன்; அறவே நீங்கப் பெற்றவன் தெய்வமெனப் போற்றப்படுகிறான். துறவின் இறுதிநிலை இவ்வகங்காரத்தை முற்றிலும் அழித்தலில் நிலைத்துள்ளது. எனவே, துறவு என்னும் மனப்பான்மையை வளர்க்க விரும்புபவன் அகப்பற்றாகிய "யான்" எனும் அகங்காரத்தை எவ்விதத்திலும் எழவொட்டாது விழிப்புடன் இருத்தல் வேண்டும். வெட்ட வெட்ட அரச மரம் துளிர்ப்பதுபோல் அகங்காரத்தைத் தடுக்கத் தடுக்க மீண்டும் மீண்டும் எழக்கூடிய தாதலால் சர்வகாலமும் இதைப்பற்றிய விழிப் புணர்வு தேவையாகும்.

'அகப்பற்றாகிய சரீரப்பற்றை விட்டுவிட் டால் அவன் பிறப்பு இறப்பு என்னும் சக்கரத் திலிருந்து நிரந்தரமாக விடுபடுகிறான்' என் பதை ஸ்ரீ சங்கரர், தம் விவேக சூடாமணியில் (சுலோ. 166) இங்ஙனம் கூறுகிறார்:

देहात्मधीरेव नृणां असद्धियां जन्मादिदुःख
प्रभवस्य बीजम् ।
यतः ततः त्वं जहि तां प्रयत्नात् त्यक्ते तु
चित्ते न पुनर्भवाशा ॥

**தேஹாத்மதீரேவ ந்ருணும் அஸத்தியாம்**
**ஜன்மாதிது:க ப்ரபவஸ்ய பீஜம்**

**யத: தத: த்வம் ஜஹிதாம் ப்ரயத்நாத் த்யக்தே**
**து சித்தே ந புனர்பவாசா**

"பொய்ம்மையில் தோய்ந்துள்ள மக்களுக்குப் பிறப்பு முதலிய துன்பம் உண்டாவதற்கு விதையாயிருப்பது 'சரீரமே ஆத்மா' என்னும் எண்ணம்தான். ஆகையால் நீ அந்த எண்ணத்தை இடைவிடாது முயன்று விட்டுவிடு. அந்த எண்ணம் விடப்பட்டு விட்டாலோ மறுபடியும் பிறப்பு ஏற்படவே மாட்டாது."

அடுத்துப் புறப்பற்றை ஆராய்வோம். புறப்பற்று என்பது ஐம்பொறிகளுக்கும் மனத்திற்கும் இன்பம் பயப்பதாகக் கருதப்படும் உலகப் பொருள்களின் மீது வைத்துள்ள வாஞ்சையாகும். இதன் விளைவாகப் புறப்பொருள்களில் 'எனது' என்னும் உடைமை உணர்ச்சி ஏற்பட்டு அவைகளை வைத்திருப்பதில் மகிழ்வும், காப்பதில் சிரமமும், இழப்பதில் நோதலும் உண்டாகின்றன. பொருள்களைப் பெறுவதில் ஆவலைத் தூண்டி இடையறாது மனதை அலக்கழிக்கும் தன்மை புறப்பற்றால் ஏற்படுகிறது. எனவே, மனதை மாண்புறச் செய்யும் தவத்திற்குப் புறப்பற்றானது பெரும் பகையாக அமைகிறது. இதனைப்பற்றித் திருவள்ளுவர் கூறுவதாவது :

**இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை**
**மயலாகும் மற்றும் பெயர்த்து.**

"பற்றுதலை உண்டுபண்ணக்கூடிய யாதொரு பொருளும் இல்லாதிருத்தல் தவம் செய்வார்க்கு இயல்பாகும்—அவசியமாகும். மாறாக, ஏதேனுமொரு பொருளைத் தம்மிடம் பொருந்தப் பெற்றிருப்பாராகில், அதுவே தவத்தைக் கெடுத்து, மீண்டும் மயக்கத்திற்கு ஆட்படுத்தும்."

'யான்' என்னும் அகங்காரப்பற்றும் 'எனது' என்னும் மமகாரப்பற்றும் கொண்டுள்ள வரை துன்பங்களும் விடாமல் பற்றிக்கொள்கின்றன. எனவே, துன்ப நீக்கத்திற்கு யான், எனது என்னும் பற்றை அறவே துறத்தல் வேண்டும். துறவு மனப்பான்மை இல்லாது போனால் மனதைத் தூயதாக்கவோ, ஒருநிலைப்படுத்தவோ, சமநிலையில் வைத்திருக்கவோ இயலாது. பற்று முற்றிலும் நீங்கப்பெறுமையினால்தான் மாபெரும் முனிவரான விசுவாமித்திரர் தம் தவத்தினின்று இடையிடையே வீழ்ச்சியுற நேர்ந்ததைக் காண்கிறோம்.

முண்டகோபநிஷத் (3-2-3) கூறுவதாவது :

**... न च प्रमादा–त्तपसो वाप्यलिङ्गात्**
**...ந ச ப்ரமாதாத்த பஸோ வாப்யலிங்காத்**

(உலக இச்சையை விட்டு விட்டோம் என்ற) பிரமையினாலாவது, ஆசைகள் நீங்காத தவத்தாலாவது (இந்த ஆத்மாவை அடையமுடியாது.)

கீதை இதனை வேறொரு போக்கில் விளக்குகிறது :

**अहंकारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।**
**विमुच्य निर्ममः शान्तः ब्रह्मभूयाय कल्पते ॥**
**அஹங்காரம் பலம் தர்பம் காமக்ரோத பரிக்ரஹம்**
**விமுச்ய நிர்மம: சாந்த: ப்ரஹ்மபூயாய கல்பதே**

*— அத். 18. சுலோ. 53.*

"அஹங்காரம், வன்மை, செருக்கு, காமம், குரோதம், உடைமை ஆகியவைகளை நீத்து மமகாரமற்றுச் சாந்தமாயிருப்பவன் பிரம்மமாவதற்குத் தகுந்தவன்."

'யான், எனது' என்னும் செருக்கு அறுத்துவிட்ட ஒருவன் தேவர்களைக் காட்டிலும் உயர்ந்தவனாவான். அவனுடைய பெருமை அளவிடமுடியாதது. இதனைக் கீழ்வரும் இரு குறட்பாக்கள் தெற்றென விளக்குகின்றன.

**யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் [வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்.**

உடம்பை 'யான்' எனக் கருதுதலும் தொடர்பு இல்லாத பொருளை 'எனது' எனக் கருதுதலும் ஆகிய மயக்கத்தைப் போக்கியவன் தேவர்க்கும் எட்டாத உயர்ந்த நிலை அடைவான்.

**துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.**

பற்றுக்களைத் துறந்தவர்களின் பெருமையை அளந்து கூறுதல், உலகத்தில் இதுவரையில் பிறந்து இறந்தவர்களை எண்ணிக் கணக்கிடுவதைப் போன்றது.

பற்றைத் துறக்காமல் துன்பத்தை ஒழிக்க இயலாதா? உலக போகங்களைத் துய்க்கவும் வேண்டும், அதற்கிடையில் துன்பங்களினின்று விடுபடவும் வேண்டும்- இதற்கு வழியில்லையா? இக்கேள்வி, 'கூழையும் குடிக்கவேண்டும், மீசையிலும் அது ஒட்டிக்கொள்ளலாகாது' என்னும் விருப்பம் போன்றது. அப்படி ஒருநாளும்

சாத்தியப்படாது. இதனைப்பற்றித் திருவள்ளுவர் கூறுவதாவது:

**பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்**
**பற்றி விடாஅ தவர்க்கு.**

''இருவகைப் பற்றினையும் இறுகப் பற்றி விடாதாரைப் பிறவித் துன்பங்கள் இறுகப் பற்றி, விடா.''

இனி, மற்றொரு விதத்தில் இந்தச் சிறந்த செய்தி விவேகி ஒருவனுக்கு நினைவுறுத்தப் படுகிறது. காதை நம்பி ஓசை என்னும் பொறியில் கருத்தைச் செலுத்தி மான் வேடன் கையில் அகப்பட்டு உயிரைப் பறிகொடுக்கிறது. யானை ஊறு என்ற ஸ்பரிச உணர்ச்சியில் பற்று வைத்து மக்களுக்கு அடிமையாகிறது. விட்டில் பூச்சி கண்ணை நம்பி ஒளியில் பற்றுவைத்துத் தீயில் விழுந்து மடிகிறது. மீன் சுவையில் பற்றுவைத்து நாவை நம்பித் தூண்டிலில் அகப்பட்டு மாய்கிறது. கருவண்டு மோப்பத்தில் பற்றுவைத்து மலரினுள் சென்று அதனுள் அகப்பட்டு அழிந்துபட்டுப் போகிறது. ஏதேனும் ஓர் இந்திரியத்துக்கு அடிமைப்பட்டு இவ்வுயிர்களில் ஒவ்வொன்றும் அழிந்துபட்டுப்போக வேண்டியதாயிற்று. ஐம்பொறிகளிலும் பற்றுவைத்து ஐந்திலும் மூழ்கிக் கிடக்கும் மனிதனுடைய கதி என்னவது? வாழ விரும்பும் மனிதன் ஐம்பொறிகள் மூலமாகத் தன்னைத் தானே அழித்துவருகிறான். இதினின்று தப்ப ஐம்பொறிகளை வெல்லுதல் ஒன்றே உற்ற உபாயம் ஆகும். திருவள்ளுவர் கூறுவதாவது:

**தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்.**

“முற்றத் துறந்தார் மோக்ஷத்தை நாடத் தலைப்பட்டவர்களாம். அங்ஙனமின்றி உலக ஆசை எனும் வலைக்குட்பட்டவர்கள் மீளாத் துயரத்திற்கு இடமாகிய பிறப்பு எனும் வலைக் குட்பட்டவர்களாம்.''

மேலும் இதனை வலியுறுத்த அமைந்த குறட்பாவாவது:

**பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று**
**நிலையாமை காணப் படும்.**

''இருவகைப் பற்றும் அற்றபொழுதே அந்நிலை பிறவித் துன்பத்தை ஒழிக்கும்; இல்லையானால் பிறவித் துன்பம் மாறி மாறி வந்து நிலையாமை காணப்படும்.''

திருவாய்மொழி '' அற்றது பற்றெனில் உற்றது வீடு '' எனச் சாற்றுகிறது.

பற்றை வேரறுத்தல் என்பது அவ்வளவு எளிதான காரியமன்று. பிறவிதோறும் தொடர்ந்து வந்துள்ள பற்று எண்ணிய மாத்திரத்தில் நம்மைவிட்டு நீங்கிவிடாது. நாம் எவ்வளவு முயன்றாலும் எவ்வகையிலாவது பற்று நம்மைத் தொற்றிக் கொள்கிறது. மேலும் பற்றில் நாம் சிக்கியுள்ளோம் என்னும் சிந்தனையும் பல நேரங்களில் எழுவதே இல்லை. இறைவனுடைய தேவ மாயையானது வலிமை மிக உடையது. யார் இறைவனைச் சார்ந்திருந்து அயராது முயல்கின்றாரோ, அன்னவரே பற்றுக்களினின்று விடுபட முடியும்.

உலகக் கவர்ச்சிகளினின்று விடுபடுவது தனித்த தன் சொந்த முயற்சியால் இயலாத காரியமே. ‘அவனருளால் அவன் தாள் வணங்கிப்’ பற்றினை வேரறக் களைய வேண்டும். எனவே, திருவள்ளுவர் கூறுவதாவது:

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு.**

இதற்குப் பரிமேலழகர் இங்ஙனம் உரை செய்திருக்கிறார்: ‘எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை, இதுவே நன்னெறி என்று மனத்திற்கொண்டு, தியான சமாதிகளைக் கைக்கொண்டு அநாதியாய் வரும் உடற் பற்றினை விடுக.’

இதுவரை ஆராய்ந்ததில். நாம், துறவு என்பது ‘யான், எனது’ என்னும் இருவகையாலும் எழும் பொல்லாத பற்றைத் துறத்தலே என்றும், இப்பற்றே நாம் துய்க்கும் துன்பங்களுக்கெல்லாம் காரணம் என்றும், வேரூன்றிப் புரையோடிப்போன இப்பற்றை நம்மால் எளிதில் விட முடியாது என்பதை நம்சொந்த அனுபவத்தில்காண்பதால் இறைவனுடைய அருளை வேண்டி அவரைச் சரணடைந்தால் துறவு நிலையில் வெற்றிபெற முடியும் என்றும் அறிந்துகொண்டோம். இதற்கொப்ப நாம் சான்றோர் வகுத்த செந்நெறிகளைத் தீவிரமாய்க் கடைப்பிடித்து, இறைவனைச் சார்ந்து, அவனருளால் பிறவாப் பெருநிலை பெறுவோமாக.

---

# மகிஷாசுரமர்த்தனி

(சிறுகதை)

[சிவத்தொண்டன்]

ஓர் ஊரில் சிவனடி என்ற செல்வந்தர் வாழ்ந்து வந்தார். அவருக்குக் குணபரன், குணேச்சரன், குணசீலன் என்ற மூன்று பிள்ளைகளும், கலைவாணி, திருச்செல்வி, மலையரசி என்ற மூன்று புதல்விகளும் இருந்தார்கள். சிவனடி சிறந்த ஒழுக்க சீலர். கடுமையான உழைப்பாளி. வறுமை, அங்கவீனம், தீராத நோய், வேலையின்மை, கல்வியின்மை போன்ற கொடுமைகளால் அவதியுறுவோர் அவரை நாடினல் வேண்டியவாறு உதவிகள் புரிந்து தக்கபடி ஆறுதல் சொல்லி அனுப்புவது அவருடைய வழக்கம். ஆனல் ''எல்லாம் என் தலையெழுத்து'' என்று கூறிச் சோம்பி இருப்போரைக் கண்டால் அவர் கடுங்கோபம் கொள்வார். ''கடவுளைத் தொழுபவரைக் கலி என்ன செய்யும்?'' என்று துணிந்து கேட்டு வாழ்க்கையில் முன்னுக்கு வந்தவர் அவர். பலவகை வியாபாரங்களில் முதலீடு செய்து பல ஆயிரக்கணக்கான குடும்பங்கள் வசதியாக வாழ்வதற்கு வழிசெய்திருந்தமையால் அவரை எல்லாரும் வள்ளல் என்று வாழ்த்தினர்கள். அவர் பொறுமையே உருவானவர். நிறைந்த அனுபவசாலி. அவர் சுருக்கமாகப் பேசினலும் கருத்துக்கள் விளக்கமாகவே இருக்கும். சமூகசேவை, அரசியல் தொண்டு என்றெல்லாம் போலியான ஆடம்பரங்களில் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ளத் தெரியாதவர் அவர்.

ஒருநாள் காலை சிவனடி வழக்கம் போலத் தமது ஜபம், தியானம் எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு தம் அலுவலகத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். அப்பொழுது வாசற்படி அருகே இருந்த தொலைபேசி ஒலித்தது. அவர் அதை எடுத்துப் பேசினர். எதிர்முனையில் பேசிய ஆள் கரகரப்பான குரலில் அவர் பெயரைக் கேட்டான். அவரும் சொன்னர். அந்த ஆள் ''ஊருக்கு வெளியேயுள்ள காளி கோவிலிலிருந்து கிழக்கே பிரியும் ஒற்றையடிப் பாதையில் இரண்டு கிலோமீட்டர் தொலைவில் உள்ள பாழடைந்த மண்டபத்துக்கு நீங்கள் உடனே தனியாக வரவேண்டும். அங்கே உங்கள் பேரன் ஆத்மனைக் கட்டிப் போட்டிருக்கிறேம். நீங்கள் இரண்டு லட்சம் ரூபாய் கொடுத்தால் அவனை மீட்டுக்கொண்டு போகலாம். வேறு எது செய்தாலும் அவனை உயிரோடு பார்க்க இயலாது'' என்று கூறிவிட்டு அவர் ஏதும் விசாரிக்குமுன் தொலைபேசியை வைத்து விட்டான்.

சிவனடிக்குக் குப்பென்று வியர்த்தது. கோபத்தால் அவர் கண்கள் சிவந்தன. ''இருக்கட்டும்'' என்று வாயோடு சொல்லிக்கொண்டார். கைத்தடியை எடுத்துக்கொண்டு காரில் தன்னந்தனியராகக் கிளம்பினர். பதினைந்து வயதே ஆன ஆத்மன் சிவ பக்தியில் சிறந்து விளங்கினன். பள்ளியில் அவன் முதல் நிலை மாணவன். கராத்தே, ஹாக்கி, வீணை, சதுரங்கம், தேசிய மாணவர் படை, நுண்மின்னியல் என்று பல துறைகளிலும் அவன் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான். தாத்தாவும் பேரனும் நாள்தோறும் சந்தித்துச் சத் விஷயங்களைப் பேசிக்கொள்ளாமல் படுக்கச் சென்றது கிடையாது. இப்பொழுது அவனை வழிப்பறிக்காரர்கள் துன்புறுத்துகிறர்கள் என்றறிந்ததும் அவருக்குச் சினம் மூண்டதில் வியப்பே இல்லை.

தம் இலக்கை அடைந்த சிவனடி சுற்றும் முற்றும் பார்த்தார். வானளாவிய விருட்சங்களும் அடர்ந்த புதர்களுமாக அது ஒரு வனம் போலக் காட்சியளித்தது. ''யாரடா அங்கே?'' என்று ஒருமுறை கர்ஜித்தார். அப்பொழுது சற்றுத் தொலைவில் பாறைகளின் மறைவிலிருந்து ஏழெட்டுப் பேர் வெளிப்பட்டார்கள். அவர்கள் உருவத்தில் முரடர்களாகவும், உள்ளத்தில் கோழைகளாகவும் இருந்தார்கள். ஒரு சிறுவனை ஏழெட்டுப் பேர் கட்டிப்போட்டுக் காவலிருப்பதிலிருந்தே அதைப் புரிந்து கொண்டார் சிவனடி. ஒன்றும் பேசாமல் நேர்ப் பார்வையாக அவர்களை முறைத்துப் பார்த்தார். அப்பொழுது அவர்களுடைய தலைவன் போலிருந்தவன் கூறினன்: ''இதோ பாருங்கள்,

நேற்று பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள பொருள்களை லாரியில் கடத்தி வரும்பொழுது ஒரு மரத்தின்மீது மோதிவிட்டது. அப்பொழுது ஒரு பெட்டி தவறி மலைச்சரிவில் விழுந்து உடைந்து விட்டது. அதில் இருநூறு கடிகாரங்கள் இருந்தன. அந்தப் பக்கமாகச் சைக்கிளில் வந்து கொண்டிருந்த உங்கள் பேரன் அந்தப் பெட்டியைப் பார்த்ததும் விஷயத்தைப் புரிந்துகொண்டான். உடனே பக்கத்தில் எங்கோ அடர்ந்த புதரில் பெட்டியை மறைத்து வைத்துவிட்டுக் 'காவல் துறையினருக்குத் தெரிவிக்கிறேன்' என்று கிளம்பி விட்டான். அவனைத் துரத்திப் பிடித்துக் கட்டிப்போட்டு வைத்திருக்கிறோம். எங்கள் விஷயத்தில் தலையிட்டால் என்ன நடக்கும் என்று அந்தப் பொடியன் தெரிந்துகொள்ள வேண்டாமா? அதற்காகத்தான் உங்களை அழைத்தோம்." இவ்வாறு சொல்லி முடித்தான் அந்தக் கடத்தல் கூட்டத் தலைவன்.

தம் பேரன் வளர்ந்த விதத்தை எண்ணி ஒரு கணம் நெஞ்சமெல்லாம் பூரித்துப் போனார் சிவனடி. இப்பொழுது தாம் எடுக்க வேண்டிய முடிவைப் பற்றியும் யோசிக்கலானார். வருங்காலத்தில் ஆத்மன் துணிவுள்ள நேர்மையாளனாகவோ, அற்பக் குணங்களே வடிவெடுத்த மானிடப் பதராகவோ விளங்கப் போவது இப்பொழுது தம் கையில் இருப்பதை உணர்ந்தவராக அவர் பேசலானார்: "சிறுவன் செய்ததைப் போய் ஏதோ பெரிதாக எடுத்துக் கொண்டீர்களே. உங்கள் தலைவனிடம் என்னை அழைத்துப் போங்கள். அவனிடம் நான் நேரே பேசுகிறேன். இந்தப் பிரச்னையை எப்படி முடிக்கவேண்டும் என்று எனக்கு நன்றாகத் தெரியும்." ஊரில் சிவனடிக்கு இருந்த செல்வாக்கைப் பற்றி அந்தக் கூட்டத்தினர் நன்றாகவே அறிந்திருந்தார்கள். ஆகவே சற்று நேரம் அவர்களுக்குள் கூடிப் பேசிவிட்டு நகரத்தில் வசிக்கும் அவர்களுடைய தலைவனின் பெயரைச் சொன்னார்கள். அதைக் கேட்டதும் சிவனடி திடுக்கிட்டுப் போனார். ஏனெனில் அந்தப் பெயருக்குரியவர் நகரத்தில் பெரிய புள்ளி. பல முக்கியஸ்தர்களுடன் கூட்டுச் சேர்ந்து பல பெரிய வேலைகளில் ஈடுபட்டு வருபவர். மிகப் பெரும் பதவியில் இருப்பவர்களையும் ஆட்டிப் படைக்கும் அளவுக்குச் செல்வாக்கும், சொல்வாக்கும் உள்ளவர். சற்றே தயங்கி விட்டு ஒரு முடிவுக்கு வந்தார் சிவனடி. "சரி, உங்கள் தலைவனிடம் நடந்ததை எல்லாம் சொல்லி இது விஷயமாய் நான் பேச விரும்புவதாய்ச் சொல்லுங்கள்" என்று சொல்லிவிட்டு வண்டியில் போய் அமர்ந்து கொண்டார். அவர்கள் தங்கள் இருப்பிடத்துக்குச் சென்று தொலைபேசியில் தலைவனை அழைத்து நடந்ததை எல்லாம் தெரிவித்தார்கள். தலைவன் அவரை நகரத்தின் முக்கிய வீதியிலிருந்த தன் அலுவலகத்துக்கு அனுப்புமாறு கூறினான். சிவனடியும் உடனே கிளம்பினார்.

அலுவலகத்தில் தலைவனின் அறைக்குள் அவர் நுழைந்ததும் ஏதோ வெகு நாட்கள் பழகிய நண்பனைப் போல் வெகுவாக வரவேற்று அவரை அமரச் சொன்னான் தலைவன். சிவனடி நிதானமாகப் பேசினார். அவர் சொன்னார்: "இதோ பாருங்கள், திரு. அந்தகன். நாம் உழைத்துச் சேர்க்கிற பணமே சில சமயங்களில் நமக்கு ஒட்டுவதில்லை. நாட்டையும், சமூகத்தையும் கொளுத்தி விட்டு அதில் நம் வீட்டை மட்டும் குளிர்காய வைக்கலாம் என்று கணக்குப் போடும் உங்களைப் போன்றவர்கள் கடைசியில் தங்கள் சொத்துக்களின் அழிவுக்கும், தங்கள் குழந்தைகளின் சீரழிவுக்கும் தாங்களே காரணமாகிறார்கள். காலப் போக்கில் நீங்கள் இதைப் புரிந்து கொள்வீர்கள். ஔரங்கசீப்பை விட இதற்கு வேறு உதாரணமும் வேண்டுமா என்ன? சரி, அது போகட்டும். இன்னும் இரண்டு மணிநேரத்தில் என் பேரனை உங்கள் ஆட்கள் விடுவிக்க வேண்டும். இல்லாவிட்டால் உங்களுக்கு ஆபத்துக் காத்திருக்கிறது." சிவனடி இவ்விதம் எச்சரித்ததைக் கேட்டுக் கடகடவென்று சிரித்தான் தலைவன். "என்னய்யா, பண்டாரங்களுடன் சேர்ந்து பழகிப் பழகி நீரும் ஒரு திண்ணை வேதாந்தியாகி விட்டீர் போலும். பேச்செல்லாம் பலமாக இருக்கிறதே" என்று கேலியாகக் கேட்டான் தலைவன். சிவனடி, "ஆண்டவன்மீது உள்ள நம்பிக்கைதான் எனக்கென்று உள்ள ஒரே பலம். நான் அதை உறுதியாகப் பற்றிக்கொண்டிருக்கிறேன்"

என்றார். அப்பொழுது அந்தகனுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்த ஆஸ்திரேலியரிடமிருந்து அவசரத் தொலைபேசி அழைப்பு வரவே விரைந்து எழுந்து சென்றான் அந்தகன். "நான் சொல்வதைச் சொல்லிவிட்டேன். பிறகு உங்கள் விருப்பம்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார் சிவனடி. பதட்டப்படாமல் நேரே தம் அலுவலகத்துக்குச் சென்றார். "இறைவா, இந்தக் காலத்தில் நல்லவனாக இருப்பவனுக்குத்தான் சோதனைகள் அதிகம். பிறப்பில் பூனையாகவே இருக்கும் புலிக்குட்டி பல கொடூரமான பயிற்சிகளைப் பெற்றுத் தன் இனத்தின் இயல்புகளை அடைவது போல இத்தகைய அனுபவங்களை வேண்டுமென்றே கொடுத்து உன் அடியார்களை வல்லவர்கள் ஆக்குகிறாய். இது தண்டனை அன்று; ஒரு சோதனையே. என்னதான் நடக்கும், நடக்கட்டுமே என்று நீ காட்டும் நல்வழியிலிருந்து நான் விலகாமலிருக்கிறேனா என்று பரீட்சித்துப் பார்ப்பதற்காக எனக்குச் சோதனை. இப்பொழுதாவது தன் ஆணவமும், அகம்பாவமும் தவறானவை என்பதை உணர்ந்து திருந்துகிறாரா என்று பார்ப்பதற்காக அந்தகனுக்கும் இது ஒரு சோதனையே. அவருக்குச் சகல வசதிகளும் இறைவன் கொடுக்கக் கொடுக்க அவர் மேன்மேலும் தவறுகள் செய்கிறார். முடிவில் நீதியே வெல்லும். 'யாம் இருக்கப் பயம் ஏன்?' என்று நீ ஒலிக்கும் குரல் என் அந்தராத்மாவில் புனலைச் சொரியும்போது அங்குக் கொதிப்புக்கு இடம் ஏது ஐயனே!" என்று மனம் உருகினார் சிவனடி.

இவ்வளவு மனக்கவலையிலும் தம் ஊர்த் தெய்வமான அம்மனுக்கு அன்று தேர்த்திருவிழா சற்று நேரத்தில் தொடங்கவிருப்பதையும் அவர் மறந்துவிடவில்லை. தம்மால் ஊர்க் காரியம் தாமதமாகக்கூடாது என்று தம் அலுவல்களை விரைந்து முடித்துக்கொண்டு கோயிலுக்குக் கிளம்பினார். அவர் சென்று சேரவும், பூஜைகள் தொடங்கவும் நேரம் சரியாக இருந்தது. வாணவெடிகள், அதிர்வேட்டுகள் என்று ஊரார் அமர்க்களப்படுத்தினர். அமைதியான வழிபாட்டில் அதிக நம்பிக்கை வைத்திருந்த சிவனடி "பாவம் ஊர்க்குழந்தைகள்; இன்று ஒருநாளாவது அவர்கள் களிப்புடன் இருக்கட்டுமே" என்ற நோக்கத்தில் இந்த ஆரவாரத்தையெல்லாம் அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். சகல அலங்காரங்களுடன் அம்மன் பீடத்தில் அமர்ந்து தன் அருட்கண் வீச்சினால் அனைவருக்கும் ஆனந்தத்தை ஏற்படுத்திக்கொண்டிருந்தாள். அப்பொழுது மேளச் சத்தத்தையும் மீறி "டமார், படார்" என்ற பயங்கர ஓசை எழுந்தது.

எல்லாரும் பிரமித்துப்போய் ஓசை வந்த திசையை நோக்கினர். அங்கே ஒரு கட்டடத்தில் தீப்பற்றி எரிந்துகொண்டிருந்தது. அதிலிருந்து வெடிகள் கிளம்பி நாலா திசைகளிலும் சிதறின. விழாவைக் காண வந்த மக்கள் வெள்ளம் அலைபுரண்டது. ஒலிபெருக்கியில் பல முறைகள் எச்சரித்து அவர்களை ஒழுங்குபடுத்தினார் சிவனடி. செய்தியை உரியவர்களுக்கு உடனே தெரியப்படுத்தினார். சற்று நேரத்தில் அங்கே தீயணைப்புப்படை, காவல்படை, வைத்தியர்கள் படை, இராணுவப்படை என்று பலரும் வந்து நெருக்கியடித்துக் கூடினர். தீ அணைக்கப்பட்டபின், வெடிகுண்டுகளை உபயோகிப்பதில் அனுபவம் உடைய இராணுவத்தினர் வெகு ஜாக்கிரதையாக அக்கட்டடத்தினுள்ளே சென்று மீதமிருந்த வெடிகுண்டுகளையும், எரிந்துபோனவற்றையும் கைப்பற்றினார்கள்.

விசாரணைக்குப் பின் பல விவரங்கள் தெரிய வந்தன. வாண் வேடிக்கை நடந்துகொண்டிருந்தபொழுது தானாகச் சிதறிப் போய்த் தூரத்தில் விழுந்த ஒரு தீக்கங்குதான் அந்த விபத்துக்குக் காரணம் என்பதைக் கண்டுபிடித்தார்கள். அந்தக் கட்டடம் அந்தகனின் நெருங்கிய உறவினர் ஒருவருக்குச் சொந்தமானது என்பதையும் அறிந்தார்கள். எவ்வளவோ முயற்சிகள் செய்தும் அந்தகனால் அவரைச் சிறை மீட்க முடியவில்லை. மோட்டார்ப்படகில் செல்கையில் சுங்க இலாகாவினரோ விரோதிகளோ தம்மை நெருங்க முயன்றால் அந்தச் சாட்சிகளை அழிப்பதற்காகச் சில வெடிகுண்டுகளை வைத்திருந்தார்கள். அயல் நாட்டுப் படையெடுப்பு ஏற்படும்பொழுது உள்நாட்டில் குண்டுகளை வெடித்து ஜாதிக் குழப்பங்களை ஏற்படுத்து

வதற்காகவும் வைத்திருந்தார்களாம். இதற்கெல்லாம் அந்நியர்கள் பணம் கொடுப்பார்களாம். அந்தகன் பணத்துக்கு ஆசைப்பட்டு அந்த வெடிகளையும், கள்ளச் சரக்குகளையும் அந்தக் கட்டடத்தில் வைத்திருந்தாராம். தம் மகனின், மகளின் தீயில்வெந்துபோன உடலங்களைப் பார்த்த வேதனையில் விரக்தியடைந்து அந்த உறவினர் இந்த வாக்கு மூலத்தைக் கொடுத்திருந்தார்.

தவிர, இலட்சக்கணக்கான மக்கள் நேரில் கண்ட காட்சியாதலால் இதில் சாட்சியங்களை மறைப்பதற்கோ, மாற்றுவதற்கோ வழியில்லாமல் போய்விட்டது. ஆகவே அந்தகன் கைதியானார். ஒரேநாளில் பரம ஏழையுமானார். ஏனெனில் இலட்சக்கணக்கான பெருமதிப்பு வாய்ந்த அந்நிய நாட்டுச் சரக்குகள் அத்தீயில் கருகிச் சாம்பலாகிவிட்டன. சுங்கத்துறை, வருமானவரித்துறை,வணிகத்துறை என்று பலரும் அவருடைய குற்றங்களைக் கண்டுபிடித்துச் சட்டத்தை ஏவி வழக்குத்தொடுத்தனர்.கடைசியில் பதினான்கு ஆண்டுகள் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டார். அந்தகன் மிகவும் தளர்ந்து போனார். அவர் செல்வாக்குடன் இருந்த போது அவரைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு அவருடைய செல்வத்தில் சுகம் அனுபவித்தவர்களெல்லாரும் இப்பொழுது ஒன்றும் தெரியாதவர்கள்போல விலக ஆரம்பித்தனர். வாழ்க்கை என்ற பாடம் கற்றுக்கொடுத்த உண்மையின் அடி தாங்க முடியாமல் கதறலானார் அந்தகன். சிவனடியின் சீர்மையையும், சிவபக்தியின் நன்மையையும் அந்த ஒரு கணத்தில் தம் உள்ளத்தில் அவர் தெளிவாக உணரலானார்.

அதே நேரத்தில் தம் வீட்டில் விச்ராந்தியாக அமர்ந்துகொண்டு தம் பேரன் ஆத்மனுடன் பேசிக்கொண்டிருந்தார் சிவனடி. "தாத்தா, எப்படியும் அந்த அரக்கர்களின் பிடியிலிருந்து தப்பித்து உங்களுக்கும், காவல்துறையினருக்கும் தகவல் தெரிவிக்க வேண்டுமே என்று நான் மிகவும் பரபரப்பாக இருந்தேன். அப்பொழுது நன்றாகக் குடித்துவிட்டு ஆடிக்கொண்டிருந்த அந்தகனின் ஆட்கள் என்னுடைய N. C. C. கம்பு இருக்கிறதல்லவா, அதைத் தூக்கிப்போட்டுப் பிடித்து என்னைக் கிண்டல் செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒருவன் கம்பை வேகமாக வீசிஎறியவும், அது உயரப் பறந்து மரத்தின் கிளைக்கொப்பில் இருந்த தேன் கூட்டின்மீது விழுந்து அதைச் சிதைத்தது. அவ்வளவுதான், நூற்றுக்கணக்கான தேனீக்கள் ஆக்ரோஷத்துடன் பாய்ந்து அவர்களைக் கொட்டத் தொடங்கின. மதுவின் மயக்கத்தில் இருந்ததால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. கிறுகிறுத்துப்போய் அப்படியே கீழே சரிந்துவிட்டார்கள். தக்க நேரத்தில் மருத்துவ சிகிச்சை கிடைக்காததால் அங்கேயே இறந்தும் போனார்கள். நான் தப்பித்து விடுவேன் என்று அறையின் ஜன்னல்களையும், கதவுகளையும் அவர்கள் மூடி வைத்ததனால்தான் நான் உயிர் தப்பினேன். தேனீக்கள் சாந்தமடைந்து சென்ற பிறகு மிகவும் கஷ்டப்பட்டுக் கட்டுக்களைத் தளர்த்தினேன். உள்ளத்தின் அந்தரங்கத்தில் கள்ளனுக்கும் கள்ளனான கண்ணனின் திருவடியைச் சிந்தித்தேன். சொன்னால் நம்பமாட்டார்கள் என்று இதுவரை யாரிடமும் சொல்லவில்லை. ஆனால் உண்மையில் நடந்தது என்ன தெரியுமா? (தொடரும்)

---

## செய்திகள்

### நிகழ்பவை

*19—8—83 வெள்ளிக்கிழமையன்று ஆடி விடுமுறைக்குப் பின் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுலப்பள்ளி திறக்கப்படுகிறது.*

*1—9—83 வியாழக்கிழமையன்று ஸ்ரீ ஜயந்தியை முன்னிட்டு ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் பகல் பன்னிரண்டு மணி நேரம் அகண்ட நாம பஜனையும், மாலை 6-30 மணியிலிருந்து 7-30 மணிவரை ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.*

*10—9—83 சனிக்கிழமையன்று ஸ்ரீ விநாயக சதுர்த்தியை முன்னிட்டு ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் பகல் பன்னிரண்டு மணி நேரம் அகண்ட நாம பஜனையும், பகல் 11-00 மணியிலிருந்து 12-00 மணிவரை ஐக்கிய வணக்கமும், இரவு 7·00 மணிக்கு மேல் மாணவர்கள் குழுக்களாகச் சேர்ந்து விநாயகர் பூஜையும் செய்து விநாயக சதுர்த்தியைச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள்.*

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 7-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-50 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| **தாயுமானவர் இயற்றிய** | | |
| கருணாகரக் கடவுள் விரிவுரை | ... | 3-50 |
| பரிபூரணானந்தம் ஷை | ... | 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... | 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... | 3-00 |
| சுகவாரி ஷை | ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... | 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் ஷை | ... | 2-50 |
| மலைவளர் காதலி ஷை | ... | 1-50 |
| [illegible]ரசிவ வணக்கம் ஷை | ... | 1-00 |
| [illegible]னன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| [illegible]சந்திரன் (நாடகம்) | ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் ஷை | ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் ஷை | ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி ஷை | ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| அமரநாத யாத்திரை | ... | 1-25 |
| மாணிக்கன் | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| சைவன் யார்? | ..., | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1 00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1 00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் (நாடகம்) | ... | 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... | 1-00 |

| | | |
|---|---|---|
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... | 1-00 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... | 1-00 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... | 1-00 |
| தபோபலன் (நாடகம்) | ... | 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவமதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| *சக்தி தத்துவம் | ... | 0 90 |
| *சூரியநாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொருபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக்கடவுள் | ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| கந்தர் அநுபூதி | ... | 0 25 |
| The Bhagavad Gita (11th Imp.) | ... | 24-00 |
| Tirukkural (with plastic cover) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna lives Vedanda | ... | 8-00 |
| Mahaveer Sri Hanuman | ... | 7-75 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 6-00 |
| Man Making Message | ... | 7-00 |
| Ramayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| *Introducing the Gita | ... | 2-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The student | ... | 1-25 |
| The Teacher | ... | 1-00 |
| The School | ... | 1-00 |
| The Nursery School | ... | 1-00 |

# திருவாசகம்

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்





பதவுரை — கருத்துரை — விளக்கமான விரிவுரையுடன், ஏற்ற இடங்களில் உபநிஷத் மந்த்ரங்களும் இணைக்கப்பெற்றிருக்கின்றன.

எல்லாரும் அறிந்துகொள்ளக்கூடிய இனிய தமிழ்நடை. டெம்மி 1க்கு 8ல் 993 பக்கங்களையுடையது. உயர்ந்த தடிப்பான இந்தியன் பிரிண்டிங் கிளேஸ் காகிதம்—சுத்தமான பதிப்பு—அழகிய பிளாஸ்டிக் காலிகோ பைண்டு. ரூ. 40-00 மதிப்புள்ள இப்புத்தகம் பிரசார நோக்கத்தைக்கொண்டு மிக மிகக் குறைந்த

**விலை ரூ. 23-00க்கு விற்கப்படுகிறது.**

( தபால் செலவு ரூ. 5-00 )

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை — 639 115 திருச்சி ஜில்லா

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.